# பொதிகை வாசகம்

## முதற் படிவம்—முதற் பிரிவு


ஆசிரியர்கள் :

வித்துவான் ந. ஆறுமுகம்

தலைமைத் தமிழாசிரியர், நகராட்சி உயர்நிலைப்பள்ளி, விழுப்புரம்

வித்துவான் சீ. இராமலிங்கம்

தலைமைத் தமிழாசிரியர், நகராட்சி உயர்நிலைப்பள்ளி, மாயூரம்

திருத்திப் பதிப்பித்தவர் :

பண்டித வித்வான்

லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார்

தமிழ்ப் பேராசிரியர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம்,

அண்ணாமலைநகர்.





வெள்ளையன் பதிப்புக் கழகம்

கண்டனூர், இராமநாதபுர மாவட்டம்




[விலை அணா 14

திருத்திய பதிப்பு—நவம்பர் 1953
இரண்டாம் பதிப்பு—மே 1954



APPROVED FOR CLASS USE
BY THE MADRAS TEXT-BOOK COMMITTEE
[*No.* 3/54 *T. B. C. Letter* $\frac{S/5\text{–}37}{Part\ I}$ *of* 17—3—1954]



Kabeer Printing Works, Madras (2527)

# முகவுரை

பொதிகை வாசகம் என்னும் பெயருடைய இப்பாட வரிசை, அரசாங்கக் கல்வித்துறையினர் அண்மையில் வெளியிட்ட பாடத்திட்டப்படி எழுதப் பட்டுள்ளது. இத்திட்டத்திற்கிணங்க, முதற் பிரிவு நூல் நான்கு பிரிவேளைகளுக்கு உரியதாகவும், இரண்டாம் பிரிவுநூல் முதற்பிரிவினும் சற்று உயர்ந்த தமிழ் நடையுடன் மூன்று பிரிவேளைகளுக்கு உரிய தாகவும் எழுதப்பெற்றுள்ளது.

அரசியல் கல்வித்துறையினர் வெளியிட்ட திட்டப் படி, செய்யுட்பகுதியில் 150 வரிகள் இருத்தல் வேண்டும் என்பது விதி. அதன்படி இந்நூல் வரிசை யில் மாணவர்க்கேற்ற முறையில் செய்யுட்கள் சேர்க்கப்பட்டுள்ளன.

உரைநடைப் பாடங்கள் 60 பக்கங்கள் இருத்தல் வேண்டும் என்பது புதிய திட்டத்தின் விதி. இந் நூல் வரிசை இத்திட்டத்திற்கிணங்க, மாணவர்கள் சுவைத்துப் படித்தற்குரிய பாடங்கள், தக்க பயிற்சி கள், வினாக்கள், இலக்கணக் குறிப்புக்கள் முதலியவை உடையதாக எழுதப்பட்டுள்ளது.

பொதுவாக, மாணவர்களின் தமிழறிவை வளர்க் கும் கருத்துடன் இந்நூல்கள் எழுதப்பட்டிருப்பதால், இவை மாணவருலகிற்குத் தக்க பலன் நல்கும் என நம்புகிறோம். ஆசிரியருலகம் இதற்கு நல்லாதரவு நல்குமாறு வேண்டுகிறோம்.

ஆசிரியர்கள்

1. தஞ்சைப் பெரிய கோவில், பக்கம் 44

2. திருச்சிராப்பள்ளி மலைக்கோட்டை, பக்கம் 44

—*Courtesy : Archaeological Survey of India.*

# பொருளடக்கம்

# பொதிகை வாசகம்

## முதற் படிவம்—முதற் பிரிவு



## 1. தாஜ்மகால்

உலகத்தில் மனிதன் தோன்றின காலம் முதல் அவன் தன் உள்ளக் கருத்துக்களைச் செயல்களில் ஆற்ற முயன்றுகொண்டேவருகின்றான். அவனுடைய



தாஜ்மகால்

அறிவும் ஆற்றலும் முதிர முதிர, அவனுடைய செயல் முறைகளும் பண்பட்டே வருகின்றன. அவன்

ஆற்றும் செயல்களுள் அழகும் பயனும் நிறைந்து இருப்பனவற்றிற்குக் கலைகள் என்ற பெயர் உண்டாயிற்று. அக்கலைகள் பலவகைப்படும். அவற்றுள் இயல், இசை, நாடகம், ஓவியம், சிற்பம் என்பன மிகச் சிறந்த கலைகள். இவற்றுள் சிற்பம் கட்டடத் தொழிலையும் தன்பால் கொண்டுள்ளது. இத்தொழிலில் நம் இந்தியர் உலகம் வியக்கும் தேர்ச்சி பெற்றவர்களாயினர். இக்கலை நம் நாட்டில் மிகப் பழங்காலத்திலேயே தொடங்கி இன்றுவரை வளர்ந்துவருகிறது.

இந்தியர் கட்டியுள்ள கட்டடங்களுள் ஆக்ரா நகரிலுள்ள தாஜ்மகாலுக்கு விஞ்சியது எவ்விடத்திலும் இல்லை என்று அறிஞர் கூறுவர். இன்றைக்கு நானூறு ஆண்டுகட்கு முன்பு அது கட்டி முடிக்கப்பட்டது. ஆயினும் இன்று கட்டியது போலவே அது விளங்குவது அதன் சிறப்பைக் காட்டுவதாகும். மனிதன் இயற்றிய அழகிய காட்சிகளைக் காண விரும்புபவர், எந்நாட்டினராயினும், ஆக்ராவுக்குச் சென்று தாஜ்மகாலைக் காணாமல் இரார். அவ்வாறு அதனைக் கண்ணுற்ற கலையறிஞர் பலருள் பெயர் தெரியாத ஒருவர் எழுதிய கருத்தை இங்குக் காண்போம் :

"உலகத்தில் மூன்று காட்சிகள் நம் மனத்தை விட்டு என்றும் நீங்கா ; ஒன்று ஆக்ராவிலுள்ள தாஜ்மகால் ; இரண்டாவது எகிப்திலுள்ள ஸ்பிங்ஸ் ; மூன்றாவது சீனாவின் பெருஞ்சுவர்.

"நான் தாஜ்மகாலைப் பலமுறை கண்டிருக்கிறேன் ; அதன் அகன்ற மண்டப வாயிலினுள் காலடிகளை வைக்கும்போதே ஒருவிதத் திகைப்பு எனக்குண்டாகிறது ; மூச்சோட்டம் ஒரு கணம் நின்றுவிடு

கிறது. தாஜ் அளந்துபார்க்கவோ, மதிப்புப்போடவோ அமைந்த கட்டடமன்று. பெருவியப்பைத் தரும் அதன் அழகைக் கண்டு மனம் அயர்ந்துவிடுகிறது. காலையிலும், உச்சிப்பொழுதிலும், மாலை மஞ்சள் வெய்யிலிலும் அதன் வனப்பு நம்மைத் தன்வயமாக் காமலிருப்பதில்லை. தனியே அங்குச் சென்று பார்ப் போமாயின், அதன் பேரழகில் நாம் மூழ்கிப் பேரானந்தத்தில் திளைப்போம் என்பதற்கு ஐயமே இல்லை.

“தாஜைக் காணுவதற்கு ஏற்ற சிறந்த நேரம் சிலர்க்கே வாய்க்கும். முழுமதி தோன்றுவதற்குச் சற்று முன்பான இருள் நேரமே அத்தகைய காலமா கும். மரங்களுக்கிடையே நீரோடைகளுக்கருகே சோலையின் இடைநிலத்திலுள்ள உயர்ந்த சலவைக் கல்லின்மீது இருந்து, அந்நேரத்தில் தாஜைக் காண வேண்டும். அமைதியாக நாம் கூர்ந்து நோக்கினல், முதலில் வெள்ளிய மாடத்தின் மெல்லிய தோற்றமும், அதற்கப்பால் வானத்தை அளாவி எழும் முத்துநிற விமானத்தின் புகையடர்ந்ததுபோன்ற மங்கலான காட்சியும் நம் கண்களிற்படும். வரவர முத்து வெண் ணிறப் பகுதி தெளிவுற்று, அதன் வட்ட வடிவு தெரிய லுறும். ஏனெனில், மதியவன் வானத்தில் தோன்றிப் பால் போன்ற தன் வெண்கதிர்களை அதன்மீது மென் மையாக ஊற்றத் தொடங்குவான். அந்நிலா மேலே ஏற ஏற, மகாலின் விமானம் தெளிவுறுகின்றது. நம் கண்கள் அதற்கும் அப்பாலேயுள்ள சோலையைச் சார்கின்றன. அங்குத் தோன்றும் மரங்களும் கொடி களாலமைந்த சுவர்களும், சின்னஞ்சிறு கோபுரத்

தூண்களும் ஏதோ ஒரு மாயவுலகத்தைச் சார்ந்தன போல் காணப்படுகின்றன. இத்தகைய சூழ்நிலையில் —நிலவில் ஒளிரும் மரங்களுக்கும் நீர் நிலைகளுக்கும் இடையே வானுற ஓங்கி வளரும் முட்டை வடிவினதான சலவைக்கல் விமானத்தின் காட்சியை நாம் என்றும் மறத்தல் இயலாது. ஏழு கடல்களைக் கடந்தும், அளவற்ற செல்வத்தைச் செலவிட்டும் முயன்றுலும் இதைப் போன்றதொரு காட்சியைக் காணுதல் இயலாது. சொல்லுக்கடங்காத அதன் பேரழகைச் சொற்களால் அமைப்பது எப்படி?

"இருந்த இடத்தைவிட்டு எழுந்து மரங்களினூடே புகுந்து, தாஜின் முன் முற்றத்தை அடையலாம். அம்முற்றம் அல்லது வாசல் 313 அடி நீளம் பெற்ற சமசதுரமானது; 18 அடி உயரம் உயர்ந்தது; அம்முற்றத்தில் இரண்டு கோபுரத் தூண்கள் இருக்கின்றன. உள்ளே மசூதி, எண்கோன வடிவமான இரண்டு அடுக்கு மாடிகளை உடையது; அம்மாடிகளின் அரைவட்டமான மேற் சுவர்களிலும் பக்கச் சுவர்களிலும் பல நிறமுள்ள மணிகளும் கற்களும் கண்ணுடிகளும் பதிக்கப்பட்டுள்ள காட்சி கண்டு களிக்கத்தக்கது. உள்ளேயும் அத்தகைய மணிகளுக்கும் கற்களுக்கும் ஆடிகளுக்கும் இடையே பல எழுத்துக்கள் எழுதப் பெற்றிருப்பதைக் காணலாம். சுவர்களில் அமைக்கப் பெற்றிருக்கும் கோலங்கள், வளைவுகள், மடிப்புக்கள், ஜன்னல்கள், வாயில்கள் யாவும் சிற்பத் தொழிலின் சிகரத்தை எட்டியவை.

"விமானத்தின் கீழே எண்கோண வடிவமான கருவறையிலே, மிகப் பெரிய சலவைக்கல் மேடையின்

அடியிலே மும்தாஜ் மகால் என்ற மொகல் சக்கர வர்த்தினியும், அவரது கணவரான ஷாஜஹான் சக்கர வர்த்தியும் அடக்கம் செய்யப்பட்டிருக்கின்றனர்.''

அவ்வம்மையாரின் உடலை அடக்கஞ் செய்யவே அவர் கணவர் இவ்வியப்பு நிறைந்த மும்தாஜ் மகாலின் மசூதியைக் கட்டினர். இதனைக் கட்டி முடிக்க இருபது ஆண்டுகள் ஆயின. அக்காலமெல்லாம் இருபதினுயிரம் ஆட்கள் ஓயாமல் உழைத்தனர்.



ஷாஜஹான்



மும்தாஜ்மகால்

தாஜ்மகால் தோன்றியபின் பேரரசுகள் பல அழிந்துவிட்டன. எண்ணற்ற மக்கள் இறந்துவிட்டனர். ஆனல் தாஜ்மகால் மூலம் கணவன் மனைவியிடம் காட்டிய அன்பும், அக்காலத்து மக்களின் கலைத்திறனும் சிறிதும் சிதையாமல் இன்றும் நிற்கின்றன; அவை என்றும் நிற்கும்.

### அருஞ்சொற்பொருள்

ஆற்ற - செய்ய. உள்ளக் கருத்து - மனத்தில் தோன்றிய எண்ணம். ஓவியம் - சித்திரம். சிற்பம் - கல், மரம் முதலியவற்றில் செய்யப்படும் உருவம். விஞ்சியது - மேலானது.

### பயிற்சி

(1) வினாக்கள்

1. எவை கலைகள் எனப்படும்?
2. கலைகளுள் சிலவற்றின் பெயர்களைக் கூறுக.
3. காட்சிகளுள் சிறந்த மூன்று யாவை?
4. தாஜ்மகாலைப் பார்க்கத்தக்க சிறந்த நேரமும் இடமும் யாவை?
5. விமானத் தோற்றம் எவ்வாறு கூறப்பட்டுள்ளது?
6. தாஜ்மகாலின் சிறந்த பகுதிகள் யாவை?
7. அது யாருக்காகக் கட்டப்பட்டது?

(2) இலக்கணம்

மொழியின் பயன், பேசுபவர் தம் கருத்தைத் தெரிவிப்பதே. கருத்து முடிந்து நிற்கும் சொற்றொடர் வாக்கியம் எனப்படும்.

(1) தாஜ்மகால் இருக்கும் இடம்
(2) அது யாரால் கட்டப்பட்டது?
(3) அது உலகச் சிறப்பு அடைந்த காரணம்

இக் கருத்துக்களைக் குறிக்க ஒவ்வொரு வாக்கியம் எழுதுக.

(3) கட்டுரை

தாஜ்மகாலைப் பார்க்க வேண்டும் இடத்திலும், காலத்திலும் நீ இருந்து பார்ப்பதாக நினைத்துக்கொண்டு விமானம் அளிக்கும் காட்சியைப் பத்து வரிகளில் எழுதுக.

## 2. வணிகனும் நாய்களும்

ஒரு நாள் வணிகன் ஒருவன் இரு நாய்கள் தன்னைப் பின்தொடர ஒரு காட்டின் வழியே சென்று கொண்டிருந்தான். அவன் அக்காட்டில் ஓரிடத்தில் தங்கினான் ; தன் கையிலிருந்த பையைத் திறந்து அதினின்று ஒரு ரொட்டித் துண்டை யெடுத்தான் ; அதில் ஒரு பகுதியைத் தின்றான் ; மற்றொரு பகுதியை நாய்களுக்குப் போட்டான். பிறகு அவன் சில பேரீச்சம் பழங்களை யெடுத்து அவற்றைத் தின்று கொண்டே கொட்டைகளைத் தூரத்தில் எறிந்து கொண்டிருந்தான். அவ்வாறு அவன் செய்துகொண்டிருந்தபோது திடீரென்று ஒரு பேய் அவன் முன் தோன்றிற்று. அது, " பாவி! உன் கொட்டைகளால் என் அருமைக் குழந்தையைக் கொன்றுவிட்டாய் ! உன்னை இப்பொழுதே கொல்லப்போகிறேன். பார்," என்று தன் கையிலிருந்த பெரிய தடியைத் தூக்கிற்று.

வணிகன் அஞ்சி நடுநடுங்கினான். அவன் எவ்வளவு இரந்து வேண்டியும் பேயின் சினந் தணியவில்லை. அவன் கடைசியாக அதனை நோக்கி, " நான் கொல்லப்பட்ட பிறகு இவ்விரு நாய்களையும் யார் காப்பாற்றுவர்? இவை என் தம்பிமார்கள் ஆயினவே!" என்று கூறி அழுதான். பேய் அது கேட்டு வியந்து, " இந்நாய்கள் உன் உடன் பிறந்தவர்களா ? மானிடனுக்கு நாய் சகோதரனாவது உண்டோ ?" என்று கேட்டது.

" நீ விரும்பினால் என் கதையைச் சொல்

கிறேன்,'' என்று வணிகன் கூற, பேய், ''சொல்'' என்றது. அவன் கீழ்வருமாறு சொல்லலுற்றான் :

''நான் பாக்தாத் நகரிலுள்ள ஒரு சிறிய வியாபாரி. என் உடன் பிறந்தவர் இருவர். நாங்கள் மூவரும் தனித்தனியே கடைகள் வைத்து வாணிகம் நடத்திவந்தோம். சிறிது காலம் கழித்து என் தம்பியருள் ஒருவன் தன் பண்டங்களையெல்லாம் விற்றுப் பணமாக்கிக்கொண்டு அந்நிய நாட்டில் பொருள் தேடப் புறப்பட்டான்.

''ஓராண்டு கழிந்தது. ஒரு நாள் என் கடை வாயிலில் ஒரு பிச்சைக்காரன் வந்து நின்றான். அவனுடைய மெலிந்த உடலையும் சுருங்கிய முகத்தையும் கிழிந்த ஆடையையுங் கண்டு நான் மனமிரங்கினேன். அவனை ஊன்றி நோக்கியபோது அவன் என் தம்பியே என்பது தெரியவந்தது. அவன் தான் கொண்டு சென்ற செல்வத்தையெல்லாம் சூதாட்டத்தில் தொலைத்து வறியனாகிவிட்டான். அவன் கதையைக் கேட்டு என் மனம் கரைந்தது. நான் அவனை என் வீட்டுக்கு அழைத்துச் சென்று நல்ல உணவும் ஆடைகளும் கொடுத்து உதவினேன்; பின்பு என்னிடமிருந்த பொருளிற் பாதியை அவனுக்குக் கொடுத்து மறுபடியும் கடை வைக்கச் சொன்னேன். மறு ஆண்டு மற்றொரு தம்பியும் வாணிகம் செய்யும் பொருட்டு வெளிநாட்டுக்குச் சென்றான். அவன் நிலையும் அவ்வாறே ஆயிற்று. நான் அவனையும் ஏற்றுக்கொண்டு பொருளுதவினேன்.

'' இவ்வாறு மூன்றாண்டுகள் கழிந்தன. ஒருநாள் தம்பியர் இருவரும் என்னிடம் வந்து, 'நாம் மூவரும்

வெளிநாட்டுக்குச் சென்று வாணிபம் செய்து வருவோம்,' என்று என்னிடம் யோசனை கூறினர். நான் எவ்வளவு மறுத்தும் அவர்கள் கேட்கவில்லை. அவர்களிடம் வைத்த அன்பினால் முடிவில் நான் அவர்களுடைய சொல்லுக்கு இணங்கினேன். நான் என்னிடமிருந்த பொன்னாணயங்களை எண்ணிப் பார்த்தேன்; ஆறாயிரம் பொன் இருந்தது. நான் மூவாயிரம் பொன் நாணயங்களை என் வீட்டில் ஓரிடத்தில் புதைத்து வைத்துவிட்டேன். நாங்கள் தலைக்கு ஆயிரம் பொன் வீதம் மூவாயிரம் பொன்னைக் கையில் எடுத்துக் கொண்டு கப்பலேறினோம்.

'' கப்பல் கிழக்கு நோக்கி நீண்ட தூரம் சென்றது. முடிவில் நாங்கள் ஒரு தீவில் இறங்கித் தொழில் நடத்தத் தொடங்கினோம். நாங்கள் மூவரும் தனித்தனியே வாணிகம் நடத்தினோம். கடவுளருளால் எனக்கு நல்ல வருவாய் கிடைத்தது. அவ்விருவரும் கவலையின்மையாலும் தம் தீய ஒழுக்கங்களாலும் தம் முதற்பொருளை யிழந்து, முன் போல வறியவராயினர். அவர்கள் மறுபடியும் முன்போல் என்னிடம் வந்து நின்றனர்.

'' நான் என் கடையை மூடிக்கொண்டு அவர்களுடன் பாக்தாதுக்குத் திரும்புவதாக முடிவு செய்தேன். என்னிடம் நிரம்பப் பணமும் பண்டங்களும் இருந்தன. நான் அவற்றை நான்கு பெட்டிகளில் வைத்து, அவற்றுடன் கப்பலேறக் கடல் துறைக்குச் சென்றேன்.

'' அங்கே மிகுந்த துன்ப நிலையில் ஒரு பெண் நின்றுகொண்டிருந்தாள். அவள் என்னை நோக்கி

மிக்க துடிதுடிப்புடன், 'ஐயா! நான் ஒரு பரதேசி. என்னைக் காப்பவர் எவருமில்லை; என்னைத் தங்களுடன் அழைத்துச் செல்லுங்கள். அவ்வாறு செய்யின், நான் மிக்க நன்றியுடன் நடந்துகொள்வேன்,' என்றனள். அவள் முகத்தைக் கண்டு என் மனம் இரங்கியது. நான் அவளையும் என்னுடன் அழைத்துக் கொண்டேன். நாங்கள் நால்வரும் அன்று மாலையே கப்பலேறினேம்.

"கப்பல் பல நாட்கள் கடலிற் சென்றது. அப் பெண்ணினுடைய நற்பண்புகள் என் மனத்துக்கு மகிழ்ச்சியை அளித்தன. நாங்கள் நட்புடன் பழகியதைக் கண்டு, என் சகோதரர்களுக்குப் பொறாமை உண்டாயிற்று. அவர்கள் மறைவில் ஒருவரோடொருவர் நெடுநேரம் யோசனை செய்து, என்னைக் கொன்றுவிட்டு அப்பெட்டிகளைத் தாமே எடுத்துக் கொள்ள முடிவு செய்தனர். ஒரு நாள் நள்ளிரவில் கப்பலில் இருந்தவர்களெல்லோரும் அயர்ந்து உறங்கிக் கொண்டிருந்த போது, என் தம்பியர் இருவரும் என்னையும் அப்பெண்ணையும் தூக்கிக் கடலில் எறிந்துவிட்டனர். நான் திகைத்துக் கடல் நீரில் முழுகிக்கொண்டிருந்தேன்; அப்பொழுது அப்பெண் ஒரு தெய்வ உருவத்துடன் என் முன் தோன்றி, 'நான் ஒரு தேவதை; உன் நற்குணங்களைக் கண்டு உன்னுடன் வாழ விரும்பினேன். நீ அஞ்ச வேண்டா. உன்னை ஒரு நொடியில் உன் நகரிற் கொண்டுபோய்ச் சேர்க்கிறேன்,' என்று கூறினள்.

"அச்சொற்கள் என் செவிகளில் புகுவதற்கு முன்னே, நான் பாக்தாது நகரத்தில் என் வீட்டு

முற்றத்தில் நிற்கக் கண்டேன். என் அருகில் இவ் விரண்டு நாய்களும் நின்றன. அத்தெய்வம் என்னை மறுமுறையும் விளித்து, 'இவ்விருவரும் உன் உடன் பிறந்தவர். இவர்களுடைய நன்றிகெட்ட தன்மைக்காக இவர்களை நான் நாயாக மாற்றினேன். இன்று முதல் இவர்கள் பத்தாண்டுகள் இந்நிலையி லேயே இருக்க வேண்டும். அதன்பின் இவர்களை மக்கா நகருக்கு அழைத்துக்கொண்டு செல்லின், அங்கே இவர்கள் தம் பண்டை உருவை அடைவார் கள்,' என்று சொல்லி மறைந்துவிட்டது.

" நான் அன்று முதல் பத்தாண்டுகளாக இவர்க ளோடு வாழ்ந்துவருகிறேன். இப்பொழுது மக்காவுக் குச் செல்லும் வழியில் எனக்கு இந்த இன்னல் நேர்ந் திருக்கிறது," என்றான்.

இவ்வரலாற்றைக் கேட்டுப் பேய் மனம் இரங் கிற்று. அது வணிகனை மன்னித்து, அவன் வழியே செல்லவிட்டது.

—அராபியக் கதை

அருஞ்சொற்பொருள்

ஓர் + ஆண்டு = ஓராண்டு - ஒரு வருடம். வறியவன் - ஏழை. வாணிகம் - வியாபாரம். நற்பண்புகள் - நற்குணங்கள். நள்ளிரவு- நடுஇரவு. மக்கா - முஸ்லிம்களுடைய புண்ணிய க்ஷேத்திரம். பண்டை உருவம் - பழைய உருவம். இன்னல் - துன்பம். பரதேசி - வேற்று நாட்டவன். சுதேசி - சொந்த நாட்டவன்.

பயிற்சி

(1) வினாக்கள்

1. பேய் வணிகனைக் கொல்லத் துணிந்தது ஏன்?

2. வணிகனின் தம்பியர் இருவரும் எவ்வாறு ஏழைகள் ஆயினர்?

3. வணிகன் தான் அயல் நாட்டுக்குச் செல்லுமுன் பொன்னை என்ன செய்தான்?

4. தீவில் நடந்த வாணிகத்தால் மூவர்க்கும் விளைந்தவை யாவை?

5. கடற்கரையில் தோன்றிய பெண், வணிகனிடம் வேண்டிய உதவி யாது?

6. தம்பியர்க்கு அண்ணன்மீது பொருமை உண்டாகக் காரணம் யாது?

7. தம்பியர் அண்ணனுக்கு என்ன தீங்கு செய்தனர்?

8. வணிகன் கடலிலிருந்து எவ்வாறு தப்பிப் பிழைத்தான்?

9. தம்பியர் நாயுருவத்தை எவ்வாறு பெற்றனர்? அவ்வுருவம் எப்பொழுது நீங்கும்?

(2) இலக்கணம்

நாய் ஊனைத் தின்றது.—செய்வினை.

ஊன் நாயினுல் தின்னப்பட்டது.—செயப்பாட்டு வினை.

கருத்தா தானே செய்யும் வினை செய்வினை எனப்படும். அக்கருத்தாவால் செய்யப்பட்டதாகக் கூறப்படும் வினை செயப்பாட்டு வினை எனப்படும். இவற்றை நினைவிற்கொள்க.

கண்டேன், விரட்டப்பட்டது, எண்ணினர், நினைக்கப்படுகிறது, உறங்கினுள், கொள்ளப்படும்—இவற்றில் உள்ள செய்வினைகளையும் செயப்பாட்டு வினைகளையும் கூறுக.

இவற்றைத் தனித்தனி வாக்கியத்தில் பொருத்தமாக அமைத்துக் கூறுக.

(3) கட்டுரை

மூத்த வணிகன் சொன்ன கதையை மட்டும் சுருக்கி எழுதுக.

## 3. காந்தியடிகளும் பரிசுப் பொருள்களும்

காந்தியடிகளது உலகப் பெருந்தொண்டுக்கு ஆரம்பப் பயிற்சி தென்னுப்பிரிக்காவிலே நடந்தது என்பதை நீங்கள் கேட்டிருப்பீர்கள்.

அங்கே அவர் சென்ற நோக்கம் ஒன்று; அங்கேயே அவரை நீடிக்கச் செய்த காரணம் வேறென்று. ஓர் இந்திய வணிகருக்கு நீதி மன்ற வழக்கில் வாதம்



காந்தியடிகள்

புரிந்து உதவி செய்ய அவர் சென்ருர். ஆனல் அவரை அங்கு இருக்கச் செய்தவை அங்கிருந்த இந்தியக் குடிமக்களுக்கு அரசியலார் இழைத்த

துன்பங்கள். அவர் அவைகளைத் தீர்க்க வழிகாணும் முயற்சியில் ஈடுபட்டார்; அம்முயற்சியில் தென்னுப்பிரிக்காவில் இருந்த இந்தியர் உள்ளங்களைக் கவர்ந்தார். அதனுல் பல ஆண்டுகள் அவர் ஆப்பிரிக்காவிலே தங்க நேர்ந்தது.

அவர் 1896-இல் ஒரு முறை ஆப்பிரிக்காவிலிருந்து இந்தியாவுக்குத் திரும்பினுர். அப்பொழுது ஆப்பிரிக்காவில் இருந்த இந்திய நண்பர்கள் அவருடைய பிரிவுக்காக வருந்திஞர்கள். அவர் இந்தியாவுக்குப் போவது உறுதி என்பதை அறிந்து அவருக்குப் பல பிரிவுபசாரங்களை அவர்கள் நடத்திஞர்கள். பலர் தம் நினைவுக்கு அடையாளமாக விலைமதிப்புள்ள பல பொருள்களை அவருக்குப் பரிசளித்தார்கள்.

பரிசுகள் குவிந்தன. அவற்றுட் பல, அணிகலன்களாகும். ஐம்பது கினி மதிப்புடைய ஒரு தங்க மாலை காந்தியடிகளின் மனைவியாரான கஸ்தூரி பாய்க்கென அளிக்கப் பெற்றது. பரிசு பெற்ற அன்றிரவு அடிகளுக்குப் பெரிய சோதனை உண்டாயிற்று. "இப்பரிசுகளெல்லாம் என் தொழில்திறத்துக்காகவா? அல்லது என் தொண்டிற்காகவா? தொழிலுக்கென்ருல், எனக்குக் கூலி கிடைத்துவிட்டது. அதற்கு மேலே பெற



கஸ்தூரி பாய்

எனக்கு என்ன உரிமை யுண்டு? இப்பரிசுகள் என் தொண்டுக்கென்றால், தொண்டுக்குக் கூலி வாங்குவது போலன்றோ ஆகும்!'' என்று இவ்வாறெல்லாம் அவர் ஆராய்ந்துகொண்டே அன்று இரவைக் கழித்தார்.

காந்தியடிகள் தம் மனைவிக்கும் மக்களுக்கும் தொண்டின் பெருமையையும் எளிய வாழ்க்கையின் தேவையையும் பற்றி அடிக்கடி எடுத்துச் சொல்வது வழக்கம். "நகை முதலியவற்றின்மீது விருப்பம் வைத்தலாகாது; ஆடம்பர வாழ்க்கை கூடாது,'' என்று அவர் ஊராரிடமும் கூறி வருவார். 'இவ்வாறு உலகுக்கு உபதேசித்துவிட்டு, நாம் பல அணிகளையும் அணிந்துகொண்டு திரியலாமா? அல்லது நம்முடைய மனைவியும் மக்களும் அவற்றை அணிந்து கொள்ளலாமா?' என்னும் எண்ணமும் அவர் மனத்தைக் கலக்கியது.

விடியுமுன் அவர் உள்ளம் ஒரு முடிவுக்கு வந்தது; அப்பரிசுப் பொருள்களைத் தாம் தொடுவதில்லை யென்று உறுதிகொண்டார்; இந்தியாவுக்கு வந்தவுடன் ஒரு பெரிய மனிதரிடம் அவற்றை ஒப்படைத்து, அவற்றின் விலையைக்கொண்டு ஏதேனும் ஒரு பொது நன்மைக்கு உதவுவது என்று முடிவு செய்தார். ஆனால் அவர் தனியராய் இல்லையே! தம் மனைவியும், இரு புதல்வர்களும் அவரோடு இருந்தனர். அவர்களுடைய சம்மதமும் பெறவேண்டுமே!

மனைவியின் மனத்தை மாற்றுவதைக் காட்டிலும் மக்களின் கருத்தை மாற்றுவது எளிதென அவர் உணர்ந்தார்; அவர்களைக்கொண்டு பின்பு தம் மனைவியையும் தம் கருத்துக்கு இணங்கச் செய்துவிடலாம்

என்றும் துணிந்தார். அவர் முதலில் தம் மக்களை நோக்கி, "இவற்றால் நமக்கு யாதொரு பயனுமில்லை; இவை மிகப் பெரியவை; உங்களால் இப்பொழுது கையாள முடியாதவை; நான் இவற்றைத் தந்தவர்களுக்கே திருப்பிக் கொடுத்துவிடுகிறேன்; வேண்டுமானால் பிறகு செய்துகொள்வோம்," என்று நயமாகக் கூற, அவர்களுடைய இளைய உள்ளங்கள் அச்சொற்களுக்கு இசைந்தன. அவர்கள் தாமே தம் தாயாரிடம் பேசுவதாகவும் கூறினர்.

ஆனால் கஸ்தூரிபாயின் மனத்தை மாற்றுவது அரிதாயிற்று. கணவர் கருத்தைக் கேட்டவுடன் அவ்வம்மையார் மிகவும் வருந்தினார். கணவருடைய போக்கும் கருத்தும் அவருக்குச் சிறிதேனும் பிடிக்கவில்லை. உலகமெல்லாம் பொருளைத் தேடுவதிலேயே நாட்டமுற்றிருக்க, இவர் மனம் முழுவதும் வறுமை வாழ்க்கையிலே பதிந்திருப்பதைக் கண்டு அவர் பல முறை வருந்தியிருக்கிறார். "நம் மக்கள் வேண்டா என்று சொல்லிவிட்டார்கள். உன் உடன்பாடுதான் வேண்டும்," என்று காந்தியார் கூறியதைக் கேட்டு, அவர் மனம் நொந்தது. "இப்படியே நீங்கள் சென்றுகொண்டிருந்தால் இரண்டு மக்களைப் பெற்ற நான் என்ன செய்வேன்! உங்கள் மனம் துறவை நாடிக்கொண்டிருக்கிறது; எளிமை உங்கள் குறிக்கோளாகலாம்; அவ்வாறாயின், மணம் செய்துகொண்டிருக்கலாகாது. இப்பொழுது உங்கள் சொற்களைக் கேட்டு, சிறு பிள்ளைகள் உங்கள் விருப்பத்திற்கு உடன்பட்டிருக்கலாம். அவர்கள் எதனைக் கண்டார்கள்? யார் எது சொன்னாலும் அதனைக் கேட்பார்கள். நாளை

எனக்கு மருகியர் வந்தால், அவர்களுக்கேனும் நகைகள் வேண்டும் அல்லவா ? உங்கள் கருத்துக்கு நான் இணங்கவேமாட்டேன்,'' என்று அவர் ஒரே பிடியாக மறுத்தார்.

காந்தியடிகள் அவரிடம் பலவகைகளிற் பேசலுற்றுர்; "மருகியர் வரும் காலம் எங்கேயிருக்கிறது ? அதற்கு இப்பொழுதென்ன கவலை ?'' என்று கேட்டார். அதற்குக் கஸ்தூரி பாய், "உங்களுக்குக் கிடைத்த பரிசுகளை உங்கள் விருப்பப்படி செய்யுங்கள். எனக்கென ஊரார் அளித்த ஆரத்தை நீங்கள் எப்படி எடுக்கலாம் ?'' என்று வாதாடிப் பார்த்தார்; மேலும், "உழைப்புக்குக் கூலி வாங்கலாம்; தொண்டுக்கு ஒன்றும் வாங்கலாகாது என்று கூறுகிறீர்கள். நான் உங்கள் வீட்டில் உழைப்பதற்கு எவ்வளவு கூலி கொடுத்திருக்கிறீர்கள் ? என் உழைப்பும் தொண்டுதானே ?'' என்றும் கேட்டார்.

காந்தியடிகள் தாம் ஒரு முறை செய்த நல்ல முடிவை உலகமே எதிர்த்தாலும் மனந்தளர்ந்து மாற்றமாட்டார். உலகத்தைச் சீர்திருத்துவதன் பயிற்சியை அவர்தம் இல்லத்திலேதான் முதன்முதல் பயில வேண்டியதாயிற்று. அன்று கஸ்தூரிபாய் இணங்கவில்லை; காந்தியாரும் தம் நிலையிலிருந்து மாறவில்லை. முடிவில் பரிசுகள் யாவும் பொதுத் தொண்டுக்கே என ஒதுக்கி வைக்கப்பட்டன. ஆனல் நாளடைவில் கஸ்தூரிபாயின் மனமே மாறிவிட்டது. சில ஆண்டுகள் கழிந்தபின் அவரே முன் வந்து அப்பரிசுப் பொருள்களை விற்றுப் பொதுமக்கள் ஊழியத்துக்கு உதவலானர்.

## அருஞ்சொற்பொருள்

அணிகலன் - ஆபரணம். தொண்டு - ஊழியம்; பயன் கருதாது மக்களுக்குப் பணி செய்தல். குறிக்கோள் - நோக்கம். எளிமை - ஆடம்பரம் இல்லாத தன்மை. மருகி - மருமகள். ஆரம் - மாலை. இல்லம் - வீடு.

## பயிற்சி

(1) வினாக்கள்

1. காந்தியடிகள் ஆப்பிரிக்காவுக்குச் சென்ற நோக்கம் யாது? அவர் அங்குப் பல ஆண்டுகள் தங்கியது ஏன்?

2. பிரிவு உபசாரத்தில் அவருக்குக் கிடைத்தவை யாவை?

3. பரிசுகளைப் பெற்றபின் அடிகள் எவைகளைப்பற்றி ஆராயத் தொடங்கினர்?

4. அவர் கொண்ட முடிவு யாது?

5. குழந்தைகளின் மனத்தை அவர் எவ்வாறு மாற்றினர்?

6. கஸ்தூரிபாய் இணங்காமைக்குக் காட்டிய காரணங்கள் எவை?

7. முடிவில் கஸ்தூரிபாய் அடிகளது செயலை ஒப்புக் கொண்டது எப்படி?

(2) இலக்கணம்

இப்பாடத்திலிருந்து (1) ஆப்பிரிக்க இந்தியரின் நன்றி, (2) காந்தியடிகளின் குணம், (3) கஸ்தூரிபாயின் மனப்போக்கு இவற்றைக் காட்டும் வாக்கியங்களுள் ஒவ்வொன்று எடுத்துக் காட்டுக.

(9) கட்டுரை

காந்தியடிகளுக்கும் கஸ்தூரிபாய்க்கும் நடந்த உரையாடலை ஒரு நாடகக் காட்சிபோல் அமைத்தெழுதுக.

# 4. சரபோஜி மன்னர்

பதினேழாம் நூற்றாண்டில் தஞ்சையில் ஆண்டு வந்த நாயக்கர் வமிசத்தில் ஒரு குழப்பம் உண்டா



சரபோஜி மன்னரது உருவச்சிலை

யிற்று. அதன் பயனாக நாடு மகாராட்டிரர் கைக்கு மாறிற்று. மேற்கே மகாராட்டிர அரசை நிறுவியவர் சிவாஜி என்ற மன்னர். மிக எளிய நிலையி

லிருந்து தம் முயற்சியால் பெரும் இடையூறுகளை யெல்லாம் கடந்து அவர் தம் அரசினை நிறுவினர். அவருடைய தம்பி ஏகோஜி என்பவர் தஞ்சையை ஆண்ட நாயக்க மன்னரிடமிருந்து நாட்டைக் கைப் பற்றி ஆளத் தொடங்கினர். இது 1674-இல் நிகழ்ந்தது.

இதற்குப் பிறகு மகாராட்டிர மரபில் சரபோஜி மன்னர் என்பவர் ஒருவர் தோன்றினர். அவரை நான்காவது சரபோஜி என்று சரித்திரம் கூறு கின்றது.

இவர் பட்டத்துக்கு வந்தபோது சில தடைகள் உண்டாயின. அப்பொழுது ஆங்கிலேயர்கள் தென் னிந்தியாவிற் புகுந்து தம் அதிகாரத்தைச் சிறிது சிறிதாகப் பெருக்கிக்கொண்டு வந்தனர். ஷ்வார்ட்ஸ் என்ற பாதிரியார் தஞ்சையிலிருந்துகொண்டு ஆங்கி லேயக் கும்பினியாருக்கு ஆகவேண்டிய காரியங் களைக் கவனித்துவந்தார். அவர் சரபோஜியின் சார்பாகப் பேசி அவரையே அரசராக்கினர். சரபோஜி தம் நன்றியைத் தெரிவிப்பதற்காகத் தஞ்சைக் கோட்டையை மட்டும் தாம் வைத்துக்கொண்டு, நாடு முழுவதையும் கும்பெனியாரிடமே விட்டுவிட்டார்.

சரபோஜி ஆங்கிலேயரிடம் அதிகம் உறவாடி வந்ததால் அவருக்கு ஆங்கில மொழியில் பயிற்சி ஏற்பட்டது. இசை, மருத்துவம் ஆகிய பல கலை களிலும் அவர் தேர்ச்சி பெற்றுர். 'பல கலைகளும் உணர்ந்த சரபோஜி' எனறு பலரும் பாராட்டத்தக்க நிலையும் அவருக்கு உண்டாயிற்று.

அவர் நம் நாட்டுக்குச் செய்த பேருதவிகளுள்

சிறந்தது, அவர் தம் அரண்மனையில் தொகுத்து வைத்த ஒரு பெரிய நூல் நிலையம் ஆகும். அதற்கு 'சரசுவதி மகால்' என்பது பெயர். அவர் அதன்கண் 22,000 புத்தகங்களைச் சேமித்து வைத்தார். மிக அருமையான ஓவியங்களையும் தொகுத்து அவர் தம் அரண்மனையை அழகு செய்தார்.

அவர் ஓர் அச்சியந்திரசாலையையும் ஒரு பொருட் காட்சிச் சாலையையும் நிறுவினர்; 'ஆரோக்கியசாலை' என்று பெயருள்ள ஒரு வைத்தியசாலையையும் அமைத்து, அதனில் தக்க மருத்துவர்களை அமைத்தார்; அவர்களைக் கொண்டு, 'சரபோஜி வைத்தியம்' என்ற நூலையும் தொகுத்தார்.

அவருக்குக் குதிரைக் கலையிலும் பயிற்சி அதிகம் இருந்தது. 'பரிக்காமன் நகுலன் எங்கள் சரபேந்திர பூபதி' என்று ஒரு புலவர் அவரைப் பாராட்டினர். அவரிடம் உயர்ந்த ஜாதிக் குதிரைகள் பல இருந்தன.

சரபோஜி மன்னர் புலவர்களை நன்கு ஆதரித்தார். சிவக்கொழுந்து தேசிகர் என்ற புலவர் அவர் மீது அழகான குறவஞ்சி நூலொன்றைப் பாடியிருக்கிறர்.

அரசருக்கு முத்தாம்பாள் என்ற ஒரு மனைவியார் இருந்தார். அவர் பெயரால் ஒரத்தநாடு என்னும் இடத்தில் அவர் ஒரு சத்திரம் கட்டினர். அதைப்பற்றி ஒரு வரலாறு தஞ்சாவூர்ப் புறத்தில் வழங்குகிறது. அது பின்வருமாறு:

சரபோஜி தம் மருந்துகளுக்குப் பயன்படும் பொருட்டு ஒரு கஞ்சாத் தோட்டம் வைத்திருந்தார். ஒரு நாள் அவர் அங்கே உலாவிக்கொண்டிருந்த

போது ஒரு சிமிழ் அங்கே கிடந்ததைக் கண்டார்; அதனை எடுத்துப் பரர்த்த போது, அதனுள் ஒரு வித மை இருந்தது. அதனை எடுத்துத் தம் கண்ணில் இட்டுக்கொண்டார். அவ்வாறு செய்தவுடன் அத் தோட்டத்தில் ஓரிடத்தில் இருந்த புதையல் ஒன்று அவர் கண்களுக்குப் புலப்பட்டது. அவர் அதனை எடுக்க முயன்றுர். அப்பொழுது அதனைக் காத்துக் கொண்டிருந்த பூதம் ஒன்று வெளிப்பட்டு, ஒரு பெண்ணை அவள் உடம்பாடு பெற்றுத் தனக்குப் பலி யிட்டால், அப்புதையலை எடுக்கலாம் என்று கூறிற்று. அவர் அதைப்பற்றி ஆராய்ந்துகொண்டிருந்தபோது, அவருடைய மனைவியார் அதனைத் தெரிந்துகொண்டு தம்மைப் பலியிடுமாறும், அதனுல் கிடைக்கும் புதை யலைக் கொண்டு முப்பத்திரண்டு அறங்களையும் செய்யு மாறும் வேண்டிக்கொண்டார். தாம் உலக இன்பம் பெற்றது போதுமென்றும், ஏழை மக்கள் நன்கு வாழ்வதற்குத் தாம் பயன்பட்டால் அதுவே தமக்கு மிகுந்த மகிழ்ச்சி தருமென்றும் அவர் கூறினுர். அவ் வாறே அரசர் செய்து, அப்புதையலை எடுத்து, அதனைக் கொண்டு ஒரத்தநாட்டில் ஒரு சத்திரங்கட்டி, ஏழைகளுக்கு உணவளித்துவந்தார்.

இவ்வரலாற்றின் உண்மை யாதாயினும், சர போஜி மன்னர் தம் மனைவியார் பெயரால் செய்த அறம் இன்றும் ஒரத்தநாட்டில் நடந்துவருகிறது என்பது உண்மை. அரசியலார் அச்சத்திரத்தில் பல ஏழை மாணவர்க்கு இலவசமாய் இக்காலத்தில் உண் டியும் கல்வியும் அளித்துவருகின்றனர்.

மன்னர் செய்த அறங்கள் மேலும் பல உண்டு.

அவர் கால வேற்றுமையால் நாட்டை இழக்க நேர்ந்த போதிலும், தம் கலைச் செயல்களாலும் அறச்செயல் களாலும் இறவாப் புகழை எய்தினர்; 'எவ்வுயி ரும் தம்முயிரே யென்று எண்ணுஞ் சரபேந்திரமால்,' என்று புலவர்களால் மனமாரப் பாராட்டப்பெற்றுர்.

### அருஞ்சொற்பொருள்

சார்பாக - துணையாக. மருத்துவம் - வைத்தியம். பரி - குதிரை. உடம்பாடு - சம்மதம். இறவாப் புகழ் - அழியாத புகழ்.

### பயிற்சி

**(1) வினக்கள்**

1. மகாராட்டிர அரசை நிறுவியவர் யார்? மகாராட்டிரர் தஞ்சையை ஆளத்தொடங்கியது எப்பொழுது?
2. சரபோஜி பட்டத்துக்கு வந்தபோது தமிழ்நாட்டின் அரசியல் நிலை எப்படி இருந்தது?
3. சரபோஜி தம் அரசியல் விஷயத்தில் எவ்வாறு நடந்து கொண்டார்?
4. சரபோஜி வளர்த்த கலைகள் யாவை?
5. சரசுவதி மகால் என்பது என்ன? அதன் சிறப்பு யாது?
6. ஒரத்தநாடு சத்திரம் ஏற்பட்ட வரலாறு யாது?

**(2) இலக்கணம்**

(1) நான் அவனைக் கண்டேன்.—இது செயல் நடந்ததைக் குறிக்கும் வாக்கியம். இது உடன்பாட்டு வாக்கியம் எனப் படும்.

(2) நான் அவரைக் கண்டிலேன் (காணவில்லை)—இது செயல் நடவாததைக் குறிக்கும் வாக்கியம். இது எதிர்மறை வாக்கியம் எனப்படும். உடன்பாடு × எதிர்மறை.

இப்பாடத்திலிருந்து இவ்விரு வகை வாக்கியங்களுக்கும் இரண்டிரண்டு உதாரணங்கள் தருக.

**(3) கட்டுரை**

முத்தமிழ், மருத்துவம், ஓவியம், கட்டடம்—இக்கலைகளுள் ஏதேனும் ஒன்றைப் பற்றி ஒரு பாரா எழுதுக.

## 5. அரசவள்ளலின் அருந்தமிழ்ப்பணி

தமிழகம் எண்ணற்ற வள்ளல்களைப் பண்டைக் காலம் முதல் தன்பால் பெற்றுத் திகழ்ந்துள்ளது. அத்தகைய வள்ளல்களின் அருங்கொடைகளாலேயே தமிழர் பண்பாடும், இலக்கியமும் இடையறுமல் நாட்டில் வளர்ந்துவந்துள்ளன. தான் பெற்ற அரிய நெல்லிக்கனியை ஔவையாருக்குக் கொடுத்து, அத் தமிழ்ப் பிராட்டியை நீண்ட காலம் வாழ உதவியவன் ஒரு வள்ளல். கம்பரைப் போற்றிப் பாதுகாத்து அவரால் தமிழகத்திற்குக் கம்பராமாயணத்தை அரு ளியவனும் ஒரு வள்ளலே. இவ்வாறு நம் நாட்டுத் தமிழ் வரலாறு முழுமையும் வள்ளல்களின் வரலாறுக ளாகவே இருப்பதை அறிந்தோர் உணர்வர்.

இவ்வரிசையில் வைத்து எண்ணத்தக்க பெரியார் ஒருவர் எண்பது ஆண்டுகளுக்கு முன்னே தமி ழகத்தில் தன வணிகர் குலத்தில் தோன்றினர். அவர் தம் தொழில் துறையிலும் நாட்டின் அரசியல் துறையிலும் பல்லாண்டுகள் உழைத்துப் பேரும் புகழும் பெருக வாழ்ந்தார். திருமகளின் அருளும் அவர்பால் சிறக்க அமைந்தது.

அவர் தாம் பெற்ற செல்வத்தால் உலகத்தை வாழ்விக்கவேண்டுமென்று கருதினர். அவர் காலத்தில் நாட்டிற் பெருங்குறைகள் மலிந்துகிடந்தன. அவை அந்நியர் ஆட்சியினுல் விளைந்தவை. கைத்தொழில், வாணிகம், அரசியல், கல்வி ஆகிய எல்லாத் துறைகளிலும் நாடு மிக மெலிந்திருந்தது. மக்கள் தம் மதிப்பு இழந்தவராய்ப் பிற மொழிகளையும்

பண்பாடுகளையுமே பாராட்டிவந்தனர். தமிழ்ப் புலவர்கள் போற்றுவார் அற்று வருந்தினர். தமிழ்க் கல்விக்கு ஆதரவேயில்லை; அதனைக் கற்பித்து வளர்ப்பாரும் இல்லை.

இவ்வாறு மக்கள் வாழ்க்கைக்கெல்லாம் முதற் காரணமாயிருந்த தாய்மொழி அடைந்திருந்த தாழ் நிலையைக் கண்டு நம் வள்ளல் மனம் வருந்தினர்; தமிழுக்கு ஆக்கம் அளிப்பதற்கென்றே ஒரு பல்கலைக் கழகத்தை நிறுவினர். அப்பல்கலைக் கழகத்துக்குப் பெரும்பொருளை வாரி வழங்கியதோடு தம் வாழ்நாளில் அப்பல்கலைக் கழகத்தின் வளர்ச்சியிலேயே கண்ணும் கருத்துமாயிருந்தார். அக்கழகம் பல்வேறு துறைகளி லும் மாணவர்க்குக் கல்வி கற்பித்தாலும், தமிழ்க் கல்வியே அங்குத் தனிச் சிறப்புற்று விளங்குகின்றது. தமிழ் ஆனர்ஸ் வகுப்பு, தமிழ்ப் புலவர் வகுப்பு, தமிழாசிரியர் பயிற்சிக்கூடம், தமிழ் ஆராய்ச்சிக் கழகம் ஆகிய பல கல்விப் பகுதிகள் அங்கே தோன்றி யுள்ளன. அவை தோன்றிய காலத்தில் நாட்டில் வேறெந்தக் கல்விச் சாலையிலும் இவற்றை யொத்த வகுப்புக்கள் தோன்றவில்லை. இவற்றில் நூற்றுக் கணக்கான மாணவர்கள் பயின்று பேராசிரியர்க ளாகவும், புலவர்களாகவும் வெளி வந்தனர்; இன்றும் வருகின்றனர். பல அரிய நூல்கள் ஆராய்ந்து அச்சிடப் பெற்று வெளியிடப்பெறுகின்றன. இந்தியப் பல்கலைக் கழகங்களுள் அஃது இன்று தலை சிறந்து நிற்கின்றது: அதன் பெயர் அண்ணா மலைப் பல்கலைக் கழகம் என்பது. இப்பணியுடன் நம் வள்ளலார் நிற்கவில்லை; நாட்டில் சிறந்த புலமை

அருகிவருவதை நோக்கித் தக்க புலவர்களை அழைத்து அவர்களைப் பாராட்டிப் பெரிதும் போற்றினர்; பெரும் புலவர்களை அழைத்துத் தம் கழகத்திலே இருத்தி அவர்களுக்கு நல்ல ஊதியம் கொடுத்து, மாணவர்களுக்குத் தமிழ்க் கல்வி ஊட்டுமாறு செய்தார்; புலமையில் தலை சிறந்தவர்களுக்குப் பொன்னுடைகள் போர்த்தினர். அவ்வாறு பொன்னுடை பெற்ற பெரும் புலவர் ஒருவர், "என்மீது பொன்னுடை போர்த்திய வள்ளலது கை இச் செயலால் புகழாடை போர்த்து விட்டது," என்று உள்ளம் குளிர்ந்து பாராட்டினர்.

இவ்வாறு தமிழுக்கு வள்ளல் பெருமானர் செய்த பேருதவியால், இன்று நாடெங்கும் தமிழ் மணம் கமழ்கின்றது. பண்டைத் தமிழ் நூலறிவு நிறைந்த நூற்றுக் கணக்கான தமிழ்ப் புலவர்கள் நாடெங்கும் தமிழொளியைப் பரப்பிவருகின்றனர். புலவர்க்கெனக் கலாசாலைகளும் பயிற்சிக் கூடங்களும் ஆராய்ச்சிக் கழகங்களும் ஆங்காங்கே தோன்றிவருகின்றன. கல்விச் சாலைகளில் தமிழ் தனிச் சிறப்புடன் மிளிர்கின்றது. இவ்வாறு மங்கிக் கிடந்த நம் தாய் மொழியாகிய விளக்குக்கு எண்ணெய் ஊற்றித் திரியும் இட்டு ஒளியுடன் எரிய உதவிய பெருமை நம் வள்ளலைச் சார்ந்தது.

இதனோடு, அவர் தமிழன்னையின் மேன்மைக்குப் புரிந்தருளிய இசைத் தொண்டும் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கது. தமிழ் இயல், இசை, நாடகம் என முப்பகுதிகளைப் பெற்று, 'முத்தமிழ்' என்ற சிறப்புப் பெயருடன் பண்டைக் காலத்தில் விளங்கிவந்தது.

அவற்றுள் இசைத் தமிழ் இடையில் நின்று முன்னே யுள்ள இயலுக்கும், பின்னேயுள்ள நாடகத்திற்கும் உயிர் அளித்துக்கொண்டுவந்தது. சங்க காலத்திலும் அதற்கு முன்னும் பின்னும் பல இசைத்தமிழ் நூல் கள் வழங்கிவந்தன. பரிபாடல் என்ற சங்க நூல் இசைத்தமிழுக்கு ஓர் இலக்கியமாகும். சிலப்பதி காரம் இசைத்தமிழையும் தன்னிடத்தே கொண்ட ஒரு பெருங்காப்பியம். தேவாரம், திவ்வியப் பிரபந்தம் முதலியன இசைப் பாடல்களே. பிற்காலத்திலும் பல சிறந்த தமிழிசைப் புலவர்கள் நாட்டில் தோன்றி, இசையின் பல பகுதிகளிலும் இனிய பாடல்களைத் தொகுத்து வைத்திருக்கிறார்கள்.

தமிழிசை தனக்கென ஒரு சிறந்த இலக் கணத்தை வகுத்துக்கொண்டிருந்தது. அவ்விசைக்கு உரிய கருவிகள் தமிழ் நாட்டில் மிக நிறைந்து கிடந் தன. ஆனால் அவை பெரும்பாலும் நாளடைவில் மறைந்தொழிந்தன. தமிழிற் புதிய பாடல்களை ஆக்கும் திறனும் ஓய்ந்துவிட்டது. இசையரங்கு களிலும் பெரும்பாலும் பிறமொழிப் பாடல்களே பாடப்பெற்றன. இரங்கத்தக்க இந்த நிலையைக் கண்டு நம் வள்ளலின் மனம் நொந்தது. தமிழிசை யின் பழைய உருவைக் கண்டு களிக்க வேண்டு மென்று அவர் அவாவினார். அதன் பயனாகப் பல் கலைக் கழகத்தில் உள்ள இசைக் கல்லூரியில் இசைத் தமிழ் சிறப்பிடம் பெற்றுள்ளது. அங்கே இசை வாணர்கள் இசை ஆராய்ச்சி செய்கின்றனர்.

மாணவர்களுக்கு இலவசமாக இசைப்பயிற்சி அளிக்கப்படுகின்றது. சென்னையிலும் பிற இடங்

களிலும் தமிழிசைக் கழகங்களும் கல்விச் சாலைகளும் நிறுவப்பெற்றுள்ளன. ஆண்டுதோறும் ஆங்காங்கே மகாநாடுகள் நடத்தப்பெறுகின்றன. இசையரங்குகளில் பெரும்பாலும் இசைத் தமிழ்ப் பாடல்கள் பாடப்படுகின்றன. தமிழிசையின் மேன்மையை மக்கள் இப்போது நன்கு உணர்ந்திருக்கிறார்கள். பல இசைத் தமிழ்ப் பாடல் நூல்கள் வெளிவந்துள்ளன. இவ்வாறு பல வகையாலும் இசைத் தமிழ் வளர்வதற்கும் நம் வள்ளல் செய்த அரிய பெரிய முயற்சிகளைத் தமிழ் மக்கள் என்றும் மறக்கமுடியாது. அவர் தம் வாழ்நாளின் இறுதிப் பகுதியை இசைத் தமிழுக்கே செலவிட்டார்; பெரும் பொருளும் வழங்கினார். அவருடைய உதவியின் பயனாக இன்று இசைத் தமிழ் வளம்பெற்று விளங்குகின்றது. இத் தொண்டு என்றும் அவர் புகழை நிலைநிறுத்திவிட்டது.

இவ்விரு துறைகளிலும் அவர் செய்துள்ள பேருதவிக்கு அவர் செலவிட்ட பொருளின் அளவையோ, அவர் மேற்கொண்ட முயற்சியின் அளவையோ நாம் வரையறுத்துக் கூறுதல் இயலாது. அவற்றுள் ஒன்றையும் பொருட் படுத்தாது உழைத்து எவரும் முன்பு பெற்றறியாத பெரும் புகழை அவர் பெற்றார். அவ்வள்ளலார் யாவர்? அவரே செட்டிநாட்டு ராஜா சர் அண்ணாமலைச் செட்டியார் என்னும் பெரியார் ஆவர். அவர் நிறுவிய பல்கலைக் கழகம் அவருடைய பெயராலேயே இன்று சிதம்பரத்துக் கருகில் விளங்குகிறது. அதனை இன்று அவருடைய திருக்குமாரர் ராஜா·சர் முத்தைய செட்டியாரவர்கள் பேணி வளர்த்துவருகிறார்கள்.

## அருஞ்சொற்பொருள்

எண் + அற்ற = எண்ணற்ற - மிகப்பல. பண்டைக்காலம் - பழைய காலம். பண்பாடு - நாகரிகம். இடையறுமல் - இடைவிடாமல். பல + ஆண்டுகள் = பல்லாண்டுகள். அருகிவருவது - குறைந்து வருவது. அவாவினர் - விரும்பினர்.

## பயிற்சி

(1) வினாக்கள்

1. வள்ளல் என்பவர் யாவர்? நீ அறிந்த பண்டை வள்ளல்களில் இருவர் பெயர்களைக் கூறுக.

2. அந்நியர் ஆட்சியால் நம் நாடு அடைந்த குறைகள் யாவை?

3. அண்ணமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்ப்பணி எவ்வாறு நடைபெறுகின்றது?

4. தமிழ்ப்புலமைக்கு அண்ணமலை அரசர் எவ்வழிகளில் ஊக்கமளித்தார்?

5. அவருடைய வள்ளன்மையால் நாட்டின் தமிழ்க்கல்வி எவ்வாறு வளர்ந்தது?

6. முத்தமிழ் என்பன யாவை? அவற்றுள் இசைத்தமிழின் சிறப்பு யாது?

7. இசைத்தமிழ் முற்காலத்தில் மேன்மை யடைந்திருப்பது என்பதை எவ்வாறு அறியலாம்?

8. அண்ணமலையரசர் தமிழிசைக்குச் செய்த தொண்டுகள் யாவை?

(2) இலக்கணம்

கண்ணன் பாடம் படித்தான்.—இவ்வாக்கியத்தில் படித்தான் என்பது வினைமுற்று. இது வாக்கியத்தில் பயனிலை எனப்படும்.

படித்தலாகிய தொழிலைச் செய்தவன் கண்ணன். கண்ணன் என்னும் சொல் இங்கு எழுவாயாக வந்தது. எதைப் படித்தான்? என்று கேட்டால், பாடம் என்பது விடையாகிறது. அது வாக்கியத்தில் செயப்படுபொருள் எனப்படும். எனவே, கண்ணன்—எழுவாய், படித்தான்—பயனிலை, பாடம்—செயப்படுபொருள்.

பின்வரும் வாக்கியங்களிலுள்ள எழுவாய், பயனிலை, செயப்படுபொருள்களை எடுத்து எழுதுக.

(1) வள்ளல் ஒரு பல்கலைக் கழகத்தை அண்ணாமலை நகரில் நிறுவினர்.

(2) தாய்மொழியாகிய விளக்குக்கு அவர் செய்த உதவி சிறந்தது.

(3) மக்கள் பிற மொழிகளையே பாராட்டி வந்தனர்.

(3) கட்டுரை

அண்ணாமலை அரசரால் தமிழ்மொழி அடைந்த சிறப்பைக் குறிப்பிட்டுப் பத்து வாக்கியங்கள் எழுதுக.

## 6. அஞ்சா நெஞ்சம்

பம்பாய் மாகாணத்திலுள்ள சூரத் நகரைப் பற்றி நீங்கள் கேள்வியுற்றிருப்பீர்கள்: அது தபதி நதிக் கரையோரமாய்க் கடற்கரையிலிருந்து பதினன்கு கல் தூரத்தில் இருக்கிறது. ஐரோப்பியர்கள் இந்தியாவுக்கு வாணிகத்தின் பொருட்டு வந்தபோதே அவர்கள் சூரத் நகரத்தையே தமக்கேற்ற தங்குமிடமாகக் கொண்டார்கள். அப்பொழுது பம்பாய் சில செம்படவர்களையே குடிமக்களாகக் கொண்ட ஒரு சிற்றூராயிருந்தது. இன்று சூரத் பம்பாய் மாகாணத்துக்குத் தலைநகராக இல்லாவிட்டாலும் அதன் பழம்பெருமையிற் குறையாமலிருக்கிறது.

அவ்வூரிலே அடிக்கடி தபதி நதி பெருக்கெடுத்துக் கொடுஞ் சேதத்தை விளைவிப்பதுண்டு. அக்காலங்களில் அவ்வூரார் படும் துன்பங்களைச் சொற்களால் சொல்லவியலாது. 1833-ஆம் ஆண்டு ஜுலை மாதம் 2-ஆம் நாள் திடீரென்று பெரும்புயலும் மழையும் உண்டாகி, ஆறு பெருகலுற்றது. கணத்துக்குக் கணம் ஆற்று நீர் பெருக, நடு இரவுக்குள் நகரமெங்கும் நீர் மயமாகிவிட்டது. அதிகாரிகள் சிறிதும் உறக்கங் கொள்ளாமல் திரிந்தனர். விடிவதற்குள் ஊரில் பெரும்பகுதி நீர்க்கு இரையாகிவிட்டது. வீடுகளெல்லாம் சரிந்தன; அவற்றிலிருந்த பொருள்களெல்லாம் மிதந்தன; ஆடுமாடுகள் நீந்திப் பிழைத்தன போக, மற்றவையெல்லாம் வெள்ளத்தில் மாண்டன. மக்கள் தத்தளித்தனர். ஊரைச் சூழ்ந்து நின்ற மதில் உடைந்தது. அலுவலகங்கள் எல்லாம்

நீர்க்குள் மூழ்கியும் இடிந்தும் போயின. தோட்டங்கள் மணல் மேடுகளாயின; சாலைகள் சிற்றாறுகளாக மாறின.

ஆனால் ஊரார் எப்படியோ தம் உயிர்களைக் காத்துக்கொண்டனர். வலியவர் எளியவர்க்கு உதவினர்; ஆணென்றும் பெண்ணென்றும் நினைக்கவில்லை; ஏழையென்றும் பணக்காரனென்றும் எண்ணவில்லை; முதியவர் என்றும் இளைஞர் என்றும் பார்க்கவில்லை; உதவி செய்தல் என்னும் ஒரே நோக்கத்துடன் ஒரே மனத்துடன் ஒரே வேகத்துடன் அனைவரும் உழைத்தனர். பல படகுகள், பள்ளமான இடங்களில் சிக்கிக்கொண்ட மக்கள் பலரை ஏற்றிக்கொண்டு மேட்டு இடங்களில் சேர்த்தன.

இப்பேருழைப்பில் மிகுதியும் ஈடுபட்டவர் தாதாபாய் தொராப்ஜி பாண்டியா என்ற ஒரு பாரசீகர். பாரசீகர் பாரசீக நாட்டிலிருந்து இன்றைக்கு ஆயிரத்தைந்நூறு ஆண்டுகளுக்குமுன்னே இந்தியாவுக்கு வந்து குடியேறியவர். அன்றுமுதல் இந்தியக் குடிமக்களோடு ஒன்றுபட்டு அவர்கள் வாழ்ந்துவருகிறார்கள்.

பாண்டியா சூரத் நகரில் உடற் பயிற்சிக் கூடம் வைத்திருந்தார். அவரும் அவருடைய மாணவர்களும் வெள்ளம் வந்த அன்று உழைத்த உழைப்பிற்கு அளவில்லை; பகல் முழுவதும் பாடுபட்டுப் பலநூறு மக்களைக் காத்தார்கள். இரவு வந்தது. இன்னும் பல மக்கள் காக்கப்பட வேண்டும். கடைத்தெருவில் ஆழங் காணமுடியாத அளவில் நீர் ஓடிக்கொண்டிருந்தது. மக்கள் வீடுகளின் கூரைகளில் நின்றுகொண்டு,

மறுவினாடியில் கூரை விழுந்துவிடுமோ என்று அஞ்சினர். இருள் மூடிக்கொண்டது. ஒரு படகிருந்தால் அம்மக்களை வெளியேற்றலாம். படகு ஓட்டிகள் யாவரும் பகலெல்லாம் உழைத்த களைப்பினால் ஒய்ந்து விட்டார்கள். அருகில் ஒரு படகும் இல்லை. அருகில் கிடைக்கக்கூடிய படகு போலீஸ் அதிகாரியின் வீட்டில் இருந்தது. அவருடைய வீட்டிற்கும் கடைத் தெருவுக்கும் நெடுந்தூரம் இருந்தது. இருளோ கண்ணுக்கு ஒன்றையும் புலப்படுத்தாது மறைத்தது.

பாண்டியா அங்கே இருந்தார். அவர் மக்களுக்குத் தைரியம் சொல்லிவிட்டு, தம் கையில் ஒரு விளக்கையும் வாயால் ஒரு தடியையும் பற்றிக் கொண்டு, வெள்ளத்தில் குதித்து நீந்தத் தொடங்கினார். மக்கள் விளக்கின் குறியைக் கொண்டு அவர் செல்லுமிடத்தையே நோக்கி நின்றனர். விளக்குப் பல முறை வெள்ள அலைகளில் மறைந்தது; ஒளி மங்கிற்று. அப்பொழுதெல்லாம் கூரையில் நின்ற மக்கள் பாண்டியா மூழ்கிவிட்டார் என்று பேரிரைச்சலிட்டனர். சிறிது நேரம் கழித்து அது தோன்றிய பொழுது அவர்கள் மனவுறுதியுடன் பெருமூச்செறிந்தனர்.

பாண்டியா தம் களைப்பை நினைக்கவில்லை; வெள்ளத்தின் கொடுமையையோ, இருளின் அச்ச நிலையையோ பார்க்கவில்லை. அவர் தம் உயிரையும் பொருட்படுத்தவில்லை. பள்ளத்தில் விழுந்தும் மேட்டில் மோதியும் வெள்ளத்தோடு இழுக்கப்பட்டும் அவர் நெடுந்தூரம் சென்று போலீஸ் அதிகாரியின் வீட்டையடைந்தார்; அங்கிருந்த படகைச் செலுத்திக்

கொண்டு திரும்பினர். அவர் கையிலிருந்த விளக்கு அணைந்து போயிற்று. அவர் அன்றிரவு பட்ட தொல்லையை எவரே அறிவர் !

விளக்கொளியைக் காணாமல் மக்கள் புலம்பலாயினர் ; தாம் அனைவரும் வெள்ளத்துக்கு இரையாக வேண்டியவரே என எண்ணி ஏங்கினர். சிறிது நேரத்தில் பாண்டியா படகைச் செலுத்தி வந்த துடுப்புச் சத்தம் அவர்கள் காதுகளிற் பட்டது. இடையிடையே அவர் "வந்துவிட்டேன் ; வந்துவிட்டேன்" என்று கூறியதும் அவர்கள் செவிகளிற் புகுந்து மகிழ்ச்சியை விளைத்தது. அன்றிரவே அனைவரும் அப்படகின் துணையால் வெளியேற்றப்பட்டனர். சூரத் நகரில் வெள்ளத்தால் ஒருவரும் உயிர் இழக்கவில்லை.

அதிகாரிகளும் நகரமாந்தரும் பாண்டியாவைப் பெரிதும் பாராட்டினர். அரசாங்கத்தார் அவருக்கு ஒரு பணமுடிப்பையும் கடிகாரத்தையும் பரிசாகக் கொடுத்து, அவருடைய அரிய தொண்டிற்குத் தம் பாராட்டுதலைத் தெரிவித்தார்கள். ஆனால் அவர் தம் கடமையைச் செய்ததாகக் கருதினாரே யன்றி, ஒருவருடைய பாராட்டலையும் எதிர்பார்க்கவில்லை.

பாண்டியாவின் இயல்பே வீர இயல்பு. இவ்வியல்பு நம் நாட்டு மக்கள் பலரிடம் உண்டு. அவர்களுக்குத் தம் உயிர் ஒரு பொருளன்று. அவர்கள் ஆபத்துக் காலத்தில் அவ்வாபத்துக்குத் தாம் அஞ்சாமலும், தம் உயிரைப் பொருட்படுத்தாமலும் உலகுக்கு உழைப்பவர். அப்பெருமக்களே போற்றத்தக்க சிறப்புடையவர்.

### அருஞ்சொற்பொருள்

சொல்ல + இயலாது = சொல்லவியலாது - சொல்ல முடியாது. உறக்கம் - தூக்கம். அலுவலகங்கள் - உத்தியோக சாலைகள். சாலைகள் - தெருக்கள். சிறுமை + ஆறு = சிற்றுறு. ஒன்றுபட்டு - சேர்ந்து.

### பயிற்சி

(1) வினாக்கள்

1. சூரத்தின் பழைய வரலாறு யாது?
2. வெள்ளம் வந்தபோது சூரத்நகரம் அளித்த காட்சியாது?
3. வெள்ளத்தின்போது ஊராரின் செயல்கள் எவ்வாறு இருந்தன?
4. பாரசீகர் யாவர்?
5. வெள்ளம் வந்த அன்றிரவு கடைத்தெரு எவ்வாறு இருந்தது?
6, பாண்டியா படகினை எவ்வாறு கொண்டுவந்தார்?
7. பாண்டியா எப்படிப் பாராட்டப்பட்டார்?
8. வீர இயல்பு என்பது எத்தகையது?

(2) இலக்கணம்

(1) சூரத் ஒரு நகரம். (5) அது பம்பாய் மாகாணத்தில் உள்ளது.

இந்த இரண்டு வாக்கியங்களையும் சேர்த்து, "பம்பாய் மாகாணத்தில் சூரத் என்ற ஒரு நகரம் உள்ளது," என்று ஒரே வாக்கியமாக எழுதலாம்.

பின்வரும் வாக்கியங்களைச் சேர்த்து எழுதுக :—

(1) தபதி நதியில் அடிக்கடி வெள்ளம் பெருகுவதுண்டு; அது ஊரை அழிப்பதுண்டு.

(2) அதிகாரிகள் உறக்கம் கொள்ளவில்லை; அவர்கள் திரிந்தனர்.

(3) அக்காலத்தில் பாண்டியா என்ற ஒருவர் இருந்தார். அவர் ஒரு பாரசீகர்.

(4) பாண்டியா தம் களைப்பை நோக்கவில்லை; அவர் வெள்ளத்தின் கொடுமையையும் நோக்கவில்லை.

(3) கட்டுரை

உன் ஊரில் பெருவெள்ளமோ அல்லது பெருநெருப்போ உண்டானதாக நினைத்துக்கொண்டு அப்பொழுது மக்கள் செய்த தொண்டுகளைக் குறிப்பிட்டு ஒரு கட்டுரை எழுதுக.

# 7. தேனீ வளர்த்தல்

இந்தியாவில் உள்ள மக்களிற் பெரும்பாலோர் கிராமங்களில் வசிப்பவர்கள். அவர்களிற் பலர் ஏழைகள். கிராம மக்கள் நிலங்களிற் பயிரிட்டு வாழ்கிருர்கள் என்ருலும், அவர்களுக்குப் போதிய வருமானம் கிடைப்பதில்லை. கூலி வேலை செய்து பிழைப்பவர்களுக்கு எப்போதும் அவ்வேலை கிடைப்பது அரிது. ஆகவே, ஒவ்வொருவரும் வேறு ஒரு தொழிலைத் தம் இரண்டாம் தொழிலாக மேற்கொள்வது நன்ருகும். அத்தகைய தொழில்களில் தேனீ வளர்த்தல் ஒன்று.

தேனீ வளர்த்தல் ஒரு குடிசைக் கைத்தொழில். குடிசைக் கைத்தொழில் என்பது குறைந்த செலவில் வீட்டில் இருந்தபடியே வீட்டு மக்களே செய்வது. மாவரைத்தல், நூல் நூற்றல், மண்பாத்திரம் செய்தல், துணி நெய்தல், கூடை மிடைதல், கோழி வளர்த்தல் முதலியன நம் நாட்டில் செய்யப்படும் குடிசைத் தொழில்கள். இத்தொழில்களில் ஈடுபடுகிறவர்கள் பிறரிடம் கைகட்டிப் பிழைக்க வேண்டுவதில்லை; வேலையில்லாமல் வருந்த வேண்டுவதுமில்லை; ஊதியமும் ஓரளவு கிடைக்கும். முன் காலத்தில் நாட்டு மக்களிற் பெரும்பாலோர் இவற்றில் ஈடுபட்டிருந்ததால்தான் நாட்டில் வறுமை, வேலையில்லாத் திண்டாட்டம், பொருமை, போட்டி முதலியன இல்லாமல் இருந்தன.

நம் நாட்டில் தேனெடுத்தல் மிகப் பழங்காலம் முதற்கொண்டே நடந்துவருகிறது. ஆனல் தேனீ வளர்த்தல் என்பது பண்டைக்கால மக்களுக்குத் தெரியாது. இயற்கையாக ஈக்கள் கூடு கட்டும் இடங்களுக்குச் சென்று உரிய காலத்தில் அங்குள்ள

தேனைச் சேர்ப்பதையே அவர்கள் அறிந்திருந்தார்கள். ஆனால் இப்பொழுதோ பிற நாடுகளைப்போல நம் நாட்டிலும் வீடுகளிலேயே ஈக்களை வளர்க்கும் முறை மேற்கொள்ளப்பட்டு வருகிறது.



தேனீ வளர்க்கும் பெட்டி

தேனீக்களில் மூன்று வகை உண்டு. அவை இராணி ஈ, ஆண் ஈ, வேலை செய்யும் ஈ என்பன. இவை குடும்பம் குடும்பமாக வாழ்கின்றன.

ஒரு கூட்டில் ஓர் இராணி ஈயே இருக்கும். அது உருவத்தில் பெரிதாயும், காண்பதற்கு அழகாயும் இருக்கும். அதன் இறகுகள் கனமும் உறுதியு மானவை. அந்த இராணி ஈயேதான் குடும்பத்தைக் காப்பாற்றுகின்றது ; ஆள்கின்றது. தேன் கூடுகளில் இராணி ஈ இருப்பதற்கென்று ஓரிடத்தை அமைத்

திருப்பார்கள். அது அங்கே யிருந்து முட்டையிடும். முட்டைகளிலிருந்து குஞ்சுகள் வெளிவர ஏறத்தாழ இருபத்தொரு நாட்கள் பிடிக்கும். ஒரு முறையில் ஓர் இராணி ஈ மூவாயிரம் முதல் ஐயாயிரம் வரையில் முட்டைகளை இடும்.

அடுத்த வகையானது ஆண் ஈ; இதனைச் சோம்பேறி ஈ என்றும் சொல்லுவார்கள். இதற்குத் தேன் சேகரிக்கத் தெரியாது. ஆகையால் இதனை வீணே வளர்த்துத் தேனுக்குக் கேட்டை விளைப்பது ஏன் என்று மற்ற ஈக்கள் இதனைப் பெரும்பாலும் கொன்று விடும். ஒவ்வொரு கூண்டிலும் மிகச் சில ஆண் ஈக்களையே அவை உயிருடன் வைக்கின்றன.

மூன்ருவது வகையான வேலைக்கார ஈயே உண்மையில் பயனுள்ளது. முட்டையிலிருந்து வெளிவந்த ஒரு வாரத்திற்குள் இதற்கு இரைதேடும் ஆற்றலும் பறக்கும் வலிமையும் உண்டாகின்றன. இவை கூட்டம் கூட்டமாகப் பறந்து, நீண்ட தூரம் சென்று, மலர்களினின்று தேனைச் சேகரிக்கும். இராணி ஈ இவற்றிற்குத் தலைவியாயிருந்து இவற்றின் வேலைகளைக் கவனித்துவரும்.

இவை கூண்டுகளில் ஆயிரக்கணக்கில் வாழ்கின்றன. ஒரு நல்ல கூண்டில் முப்பத்தையாயிரம் முதல் ஐம்பதினயிரம் வரை வேலைக்கார ஈக்கள் இருக்கும்.

இவை ஓய்வில்லாமல் உழைத்துப் பல்லாயிரக் கணக்கான பூக்களிலிருந்து தேனைக் கொண்டுவந்து கூட்டிற் சேர்க்கும். இவற்றிற்குத் தற்காப்புக்காகக் கொடுக்கு உண்டு. இவை தம் பகை உயிர்களைக் கொடுக்கால் கொட்டித் தம்மிடம் வராமற் போக்கும்.

இத்தேனீக்களால் மக்கள் மற்ருெரு வகையிலும் நன்மை அடைகின்றனர். இவை, செடி, கொடி, மரம் முதலியவற்றிற் சென்று பரவுவதால் தாவரங்களின் இனப் பெருக்கத்துக்கு உதவுகின்றன. காய் கனி கள் பெருகுவதற்கு இவ்வாறு இவை செய்யும் உதவியை எண்ணிப் பாருங்கள்.

பிற நாடுகளில் தேனீ வளர்த்தலை ஒரு பெருங் கலையாக அமைத்துக்கொண்டுள்ளார்கள்; கூட்டங் கூட்டமாகத் தேனீக்களைப் பெருகச் செய்து அவற் றின் மூலமாகப் பல மணங்கு நிறையுள்ள தேனை அடைகிருர்கள். தேனை வீணுக்காமல் எடுக்கவும் ஈக்களை நசுக்காமலிருக்கவும், ஈக்களால் தொல்லையில் லாமல் தம்மைக் காக்கவும், அவர்கள் பல புதிய வழி களைக் கையாளுகிருர்கள். ஒருவிதப் புகையைக் கூண்டினுள் செலுத்தி, தேனீக்களை மயங்கவைத்து, ‘நகரும் சட்டம்’ என்ற ஒருவகைக் கருவியால் தேன் வீணுகாதபடி எடுக்கிருர்கள். தேனீக்களைப் பெட்டிக ளுடன் வேறு இடங்களுக்கும் எடுத்துச் செல்லலாம்.

தேன் மனிதர்க்குச் சிறந்த உணவாகும். சுவை யினுலும், உடல் வளர்ச்சியைத் தரும் சத்துள்ள பொருளாலும் சிறந்த இவ்வுணவை மிகக் குறைந்த செலவில் அடைவதற்கு நமக்கு நல்ல வாய்ப்புக்கள் இருக்கின்றன. அவற்றை நம் நாட்டு மக்கள் அனை வரும் பயன்படுத்திக்கொள்ளவேண்டும்.

அருஞ்சொற்பொருள்

ஊதியம் - பொருள் வருமானம். வறுமை - ஏழ்மை. பல + ஆயிரம் = பல்லாயிரம். பகை உயிர் - விலங்கு, பறவை, மனிதன் முதலிய பகைவர்.

### பயிற்சி

**(1) வினாக்கள்**

1. கிராம மக்கள் பெரும்பாலோரின் செல்வ நிலைமை எவ்வாறு உள்ளது?

2. குடிசைக் கைத்தொழில் என்பது யாது? சில குடிசைக் கைத்தொழில்களின் பெயர்களைக் கூறுக.

3. குடிசைக் கைத்தொழில்களினால் நீங்கத்தகும் தீமைகள் யாவை?

4. தேனீக்களின் வகைகள் யாவை? ஒவ்வொரு வகை ஈயின் தொழில் என்ன?

5. தேனீக்களால் மக்கள் அடையும் வேறு நன்மை யாது?

6. இக்காலத்தில் தேனீ எவ்வாறு வளர்க்கப்படுகிறது?

**(2) இலக்கணம்**

(i) பெயர்ச்சொல் ஆறு வகைப்படும். அவை (1) பொருட் பெயர், (2) இடப்பெயர், (3) காலப்பெயர், (4) சினைப்பெயர், (5) குணப்பெயர், (6) தொழிற்பெயர் என்பன.

(1) கல், மண், மரம்—பொருட் பெயர்கள்.
(2) வீடு, மலை, ஆறு—இடப்பெயர்கள்.
(3) சித்திரை, நாள், மாதம்—காலப்பெயர்கள்.
(4) கை, வால், கிளை—சினைப்பெயர்கள்.
(3) கருமை, நன்மை, வட்டம்—குணப்பெயர்கள்.
(6) ஓடுதல், ஓட்டம், வரவு—தொழிற்பெயர்கள்.

முன் நடந்த பாடங்களிலிருந்து அறுவகைப் பெயர்களுக்கு உதாரணம் தருக.

(ii) மனிதர், தேவர் இவர்களைக் குறிக்கும் பெயர்கள் உயர்திணைப் பெயர்கள் எனப்படும். மற்ற விலங்கு முதலிய உயிர்ப் பொருள்களையும், கல், மண் முதலிய உயிரில்லாத பொருள்களையும் குறிக்கும் பெயர்கள் அஃறிணைப் பெயர்கள் எனப்படும்.

(1) முருகன், இந்திரன்—உயர்திணை.
(2) யானை, மலை—அஃறிணை.

இப்பாடத்திலிருந்து இரு திணைகளுக்கும் இரண்டிரண்டு உதாரணங்கள் தருக.

**(3) கட்டுரை**

உனக்குத் தெரிந்த ஒரு குடிசைத் தொழிலைப் பற்றி ஒரு கட்டுரை எழுதுக.

## 8. காவிரி நாகரிகம்

உலகத்தில் தோன்றிய நாகரிகங்களுட் பல பெரிய ஆற்றங்கரைகளில் தோன்றியவை என்பதை அறிஞர் அறிவர். நம் பாரத நாட்டில் சிந்து, கங்கை, காவிரி போன்ற பெரிய ஆறுகளின் ஓரமாகவே பெரிய பேரரசுகளும் சமூக இயக்கங்களும் தோன்றி வளர்ந்தன.

அவற்றுள் தென்னிந்தியாவில் சிறப்புற்று விளங்கும் காவிரியின் ஓரங்களில் விளைந்த பண்டை நாகரிகங்களையும் அவற்றின் தன்மைகளையும் பற்றி இங்குச் சில காண்போம் :

காவிரி குடகு மலையிற் பிறந்து மைசூர் நாட்டின் வழியாக ஓடி, சேலம், கோயம்புத்தூர் மாவட்டங்களின் வழியாகச் சோழ நாட்டினுள் புகுந்து, காவிரிப் பூம்பட்டினம் என்னும் சிற்றூருக்கருகே கடலில் கலக்கிறது. அதன் பிறப்பைப் பற்றிப் பல கதைகள் நாட்டில் வழங்குகின்றன. அதன் சிறப்பைப் பற்றியும் செழுமையைப் பற்றியும் தமிழ் நூல்கள் விரிவாய்க் கூறுகின்றன. அதன் கரையோரமாக இருக்கும் பல பெரிய நகரங்களும் கிராமங்களும் காவிரியின் பெருமையை நாம் அறிந்துகொள்வதற்குச் சான்றாக இருக்கின்றன. ‘ சோணாடு சோறுடைத்து ’ என்னும் பழமொழி காவிரியின் சிறப்பால் எழுந்தது.

இவற்றிற்கெல்லாம் மேலாகக் காவிரி நாடு கலைகளின் வளர்ச்சிக்கு உதவியுள்ள ஊக்கமே சிறப்புடையது. செடியில் மலரே சிறப்புடையதாயும்,

எல்லோராலும் போற்றப்படுவதாயும் இருப்பதுபோல் நாட்டின் விளைவுகள் எல்லாவற்றிலும் கலைகளே மேலோங்கி விளங்குபவை ஆகும்.

அக்கலைகளுள் இலக்கியம் மிகச் சிறந்ததாகும். மக்களின் மன உணர்ச்சிகளை நன்கு தெரிவிப்பன இலக்கியங்களே. அன்றியும், தாம் எழுந்த காலத்தின் பண்பாடுகளைத் தெரிவிக்கும் கண்ணாடிகள்போல அவை விளங்குகின்றன. இத்துறையில் காவிரி நாடு மிகப் பழங்காலம்தொட்டு உயர்வு பெற்றிருக்கிறது. சங்கப் பாடல்களுட் பல சோழ நாட்டுப் புலவர்களால் பாடப்பெற்றவை. கரிகாற்பெருவளத்தான் போன்ற சோழ மன்னர்கள் புலவர்களைப் பெரிதும் ஆதரித்தனர். கடியலூர் உருத்திரங் கண்ணனார் என்ற புலவருக்கு அவன் பதினாயிரம் பொன் பரிசிலாகக் கொடுத்தான். மணிமேகலையை இயற்றிய சாத்தனார் பிறந்த இடம் சோழ நாட்டுச் சீத்தலை என்னும் ஊரே. சைவ சமயாசாரியர்களிலும் ஆழ்வார்களிலும் பலர் காவிரி நாட்டவர்களே. ஔவையார், கம்பர், ஒட்டக் கூத்தர், ஜயங்கொண்டார் முதலிய பெருங் கவிஞர்களும் இந்நாட்டைச் சார்ந்தவர்களே. தமிழுக்குப் பேருதவி புரிந்துவரும் தமிழ் மடங்கள் எல்லாம் இங்கேயே இருக்கின்றன.

தமிழ் வள்ளல்களிற் பலர் இந்நாட்டினரே. இக் காலத்திலும் தமிழுக்குரிய பல்கலைக் கழகம் இங்கேயே இருக்கிறது. தேவாரம் கண்டெடுத்த நம்பியாண்டார் நம்பி இந்நாட்டவரே. மறைந்து கிடந்த தமிழ்நூல்களைத் தேடி உலகுக்கு அளித்த தமிழ்த் தாத்தா டாக்டர் உ. வே. சாமிநாதையர் பிறந்து வளர்ந்ததும்



தஞ்சைப் பெரிய கோவில்



திருச்சிராப்பள்ளி மலைக் கோவில்

இந்நாடே. இசை, நாடகம் இவற்றை எடுத்துக் கொண்டால் இவற்றில் இந்நாடு படைத்திருந்த பண்டைப் பெருமையைச் சிலப்பதிகாரம் நன்கு வெளிப்படுத்துகின்றது. இசையிற் பெரும்புகழ் பெற்ற ஆசிரியர்களுட் பெரும்பாலோர் காவிரிக் கரையில் வாழ்ந்தவர்களே. இன்றும் காவிரி நீரை அருந்திய இசையாசிரியரும் நாடகவாசிரியருமே அத்துறைகளில் புகழ்பெற்று வருகின்றனர்.

இனி, ஓவியம், சிற்பம் போன்ற நுண் கலைகளின் தன்மையை ஆராய்வோம்: சோழ நாட்டில் செல்லுமிடம் எல்லாம் கோயில்களைக் காணலாம். இவ்வாறு கோயில்கள் நிரம்பிய வேறொரு நாட்டை நாம் உலகில் வேறெங்கும் காணமுடியாது. சங்க காலத்து மாடக் கோயில்களையும், பல்லவர் காலத்துக் கற்கோயில்களையும், சோழர் காலத்துக் கோபுரங்களையும் நாம் இங்கே காணலாம். திருச்சிராப்பள்ளியிலுள்ள கற்கோயிலையும், தஞ்சாவூரிலுள்ள பெருங்கோயிலையும், தாராசுரத்திலுள்ள சிற்பங்களையும் விளக்கிப் பல நூல்கள் எழுதலாம். இவ்வாறே ஒவ்வொரு கோயிலிலும் காணப்பெறும் கல் உருவங்களையும், உலோக உருவங்களையும் பற்றி எத்துணையோ நூல்கள் எழுதலாம். தஞ்சைக் கோயிற் சுவர்களில் ஆயிரமாண்டுகட்கு முன் எழுதப்பெற்ற ஓவியங்கள் உயிரோவியங்களோ என ஐயுறத்தக்க நிலையில் திகழ்கின்றன.

இன்னும் இந்நாட்டுக் கலைச் செல்வங்கள் மிகப் பல. கைத்தொழிலில் சோழநாடு இணையிலாச் சிறப்புற்றிருந்தது. செம்பு, ஈயம், பித்தளை, வெண்கலம்,

வெள்ளி முதலிய உலோகங்களினுல் இங்குச் செய்யப் பெற்ற பாத்திரங்கள் மிக்க புகழ் வாய்ந்தவை.

மக்களும் அறிவு, அடக்கம், கடவுள்பக்தி முதலிய வற்ருல் மேலோங்கி வாழ்ந்தார்கள். அவர்களது கல்வியறிவு பாரத நாடு முழுவதும் ஒளி வீசிற்று. விஜயநகரம் போன்ற தெலுங்கு நாட்டு நகர்களிலும், காசி போன்ற வட நாட்டு நகர்களிலும் காவிரி மக்கள் தங்களறிவு விளக்கத்தால் போற்றப்பட்டு வந்தனர்.

இவ்வளவு பெருமைக்கும் காரணம் காவிரியாறே யாகும். அதனை ‘ உயிர் ஆறு ’ என்பர் ; அவ்வுயிரே (நீரோட்டமே) நாட்டை உயர்ந்த நிலைக்குக் கொண்டு செலுத்துவது. அவ்வுயிர் என்றும் நிற்பது. ஆகவே, காவிரி நாடு என்றும் உயர்நிலையிலேயே சிறந்து விளங்கும்.

அருஞ்சொற்பொருள்

செழுமை - நிலவளம் நீர்வளம் முதலியன. சான்று - சாட்சி. சோறு + உடைத்து = சோறுடைத்து ; உணவு வளம் உடையது. பண்பாடு - நாகரிகத்தின் உயர்நிலை. தொட்டு - தொடங்கி. பேர் + உதவி = பேருதவி - பெரிய உதவி.

பயிற்சி

(1) வினுக்கள்

1. காவிரி ஆறு தோன்றுமிடம், செல்லும் வழி, கடலொடு கலக்கும் இடம் இவற்றைக் குறிப்பிடுக.

2. முத்தமிழ் என்பன யாவை ?

3. காவிரிக் கரையில் தோன்றிய இலக்கியங்களைப் பற்றி நீ யாது அறியாய் ?

4. சோழ நாட்டுக் கோயில்களை எத்தனை வகையாகப் பிரிக் கலாம் ? அவை ஒவ்வொன்றுக்கும் ஒவ்வோர் உதாரணம் தருக.

5. கோயில்களில் காணப்படும் கலைத்திறன்கள் யாவை ?

6. காவிரி மக்களின் பெருமைகள் யாவை ?

7. 'காவிரியே நாட்டின் உயிர்'—என்பது எவ்வாறு பொருந்தும்?

(2) இலக்கணம்

பெயர்ச் சொற்களுக்குத் திணை, பால், எண், இடம், வேற்றுமை என்பன உண்டு. சென்ற பாடத்தில் திணையைப் பற்றி அறிந்தீர்கள். இப்பாடத்தில் பால், எண், இடம் இவற்றைப் பற்றி அறியலாம்.

1. பால் - பிரிவு

கந்தன், அரசன்—ஆண்பால்
வள்ளி, அரசி—பெண்பால்
பிள்ளைகள், அரசர்—பலர்பால்
மாடு, மலை—ஒன்றன் பால்
மாடுகள், மலைகள்—பலவின்பால்

2. எண்—ஒருமை, பன்மை என இருவகைப்படும்.

அரசன், மாடு, மலை—ஒருமை.
அரசர், மாடுகள், மலைகள்—பன்மை.

3. இடம்—தன்மை, முன்னிலை, படர்க்கை என மூன்று வகைப்படும்.

(1) நான், நாங்கள்—தன்மை இடம்
(2) நீ, நீங்கள்—முன்னிலை இடம்
(3) அவன், அவள், அவர், அது, அவை, அரசன், அரசி, அரசர், மலை, மாடுகள் முதலிய எல்லாப் பெயர்களும் } படர்க்கை இடம்

பின்வருவனவற்றில் உள்ள பெயர்ச் சொற்களுக்குத் திணை, பால், எண், இடம் கூறுக:—

(1) நாம் இப்பாடத்திலிருந்து காவிரி நாட்டின் சிறப்பை நன்கு அறிகின்றோம்.
(2) நீங்கள் இப்பாடத்திலிருந்து சோழ நாட்டை ஆண்ட பழைய அரசர்களைப் பற்றி ஓரளவு அறிந்திருக்கிறீர்கள்.

(3) கட்டுரை

சோழநாட்டுச் சிறப்பினை ஒரு கட்டுரையாக எழுதுக.

# 9. மைக்கேல் பாரடே

உலகில் காணும் பொருள்களின் தன்மையையும் ஆற்றலையும் அணுவளவேனும் தன் வாழ்க்கையால்



மைக்கேல் பாரடே

அதிகப்படுத்துகிறவனே 'மனிதனில் சிறந்தவன்' என்று கூறினர் ஒருவர். அவர் 1817-ஆம் ஆண்டில் இவ்வாறு கூறினர். அப்பொழுது அவருக்கு வயது இருபத்தாறு. அவர் இவ்வண்ணம் கூறியதோடு நிற்க வில்லை; கூறியபடியே செய்தும் காட்டினர். அவரே 'டைனமோ' என்ற மின்சார உற்பத்தி இயந்திரத்தை முதன்முதலாகக் கண்டுபிடித்து உலகுக்கு அளித்த உத்தமரான மைக்கேல் பாரடே என்னும் ஆங்கிலேயர் ஆவர்.

அவர் ஏழ்மையான குடியில் தோன்றினர். அவருக்கு நல்லுணவு ஊட்டவும் கல்வி புகட்டவும் தேவை

யான பொருளும் அவருடைய பெற்றோரிடம் இல்லை. அவர் ஓரளவு எழுதவும் படிக்கவும் கற்றுக்கொண்டார். அவருக்குப் பதின்மூன்றாவது வயது நடந்தபோது ஒரு புத்தகக் கடையில் ஓர் எளிய வேலை கிடைத்தது; பிறகு அங்கேயே புத்தகம் 'பைண்டு' செய்யக் கற்றுக்கொண்டு, அவ்வேலையைச் செய்யத் தொடங்கினார்.

பாரடேக்கு விஞ்ஞான அறிவில் இளமை முதற்கொண்டே ஊக்கம் இருந்து வந்தது. அவர் தமக்குப் 'பைண்டு'க்காக வரும் புத்தகங்களிலும் பத்திரிகைகளிலும் காணப்படும் விஞ்ஞானச் செய்திகளை மிகுந்த ஆர்வத்துடன் படித்து, அவற்றில் கூறப்பட்டவற்றைப் பற்றி ஆராய்வது வழக்கம். அவருக்கு மின்சாரத்தைப் பற்றி ஆராய்வதில் மிகுந்த விருப்பம் உண்டாயிற்று. அக்காலத்தில் மின்சாரத்தின் ஆற்றலைப் பற்றிப் பலர் ஆராய்ந்து கட்டுரைகளை எழுதியிருந்தனர்; அறிஞர் சிலர் அதனைப் பற்றிச் சொற்பொழிவுகளும் இயற்றிவந்தார்கள்.

அக்காலத்தில் இங்கிலாந்தில் டேவி என்ற ஒரு பெரியார் இருந்தார். இவர் இரசாயனக் கலையைப் பற்றி அடிக்கடி சொற்பொழிவுகள் ஆற்றிவந்தார். பாரடே அவ்விடங்கட்குச் சென்று அவற்றை அடிக்கடி கேட்டுவந்தார். அவர் என்றாவது டேவியிடம் பணி செய்யும் பேறு தமக்குக் கிடைக்கவேண்டுமென்று விரும்பினார்; அதற்காகப் பலமுறை முயன்றார். முடிவில் டேவியின் பணிக்களரியில் அவருக்கு மிகத் தாழ்ந்ததொரு பணி கிடைத்தது. அறையைத் துலக்குவதும் புட்டிகளைக் கழுவுவதுமே

அப்பணியாகும். அவர் அவற்றை எளியவை என்று கருதவில்லை; அவற்றை மிகுந்த கருத்துடன் கவனித்துவந்தார்.

நாளடைவில் டேவிக்கு அவரிடம் அன்பு முதிர்ந்தது. டேவியுடனிருந்து வேலை செய்யவும் அவருடன் சுற்றுப்பிரயாணம் செய்யவும் பாரடேக்கு வாய்ப்புக்கள் கிடைத்தன. பாரடே சில ஆண்டு களுக்குள் டேவியைப் போலத் திறமையுடன் விஞ்ஞான விஷயங்களைப்பற்றிச் சொற்பொழிவு செய்யவும், அவருடன் கூட ஆராய்ச்சி செய்யவும், புதிய பொருள்களைப் பற்றிக் கட்டுரை எழுதவும் பழகி, அவற்றில் திறமை பெற்ருர்.

பாரடேக்குக் கௌரவங்கள் வந்து குவியத் தொடங்கின; ஆனல் அவற்ருல் சிறிதும் செருக்குக் கொள்ளவில்லை. தாம் 'கற்றது கைம்மண்ணளவு; கல்லாதது உலகளவு' என்றே அவர் கருதி உழைக்க லானர்.

பாரடேயின் மனம் மின்சார விஷயத்தில் அதிகம் ஈடுபட்டிருந்தது என்று முன்பே சொன்னேமல்லவா? மின்சாரத்தை உண்டாக்கவும் அதனல் பயன்பெறவும் அக்கால மக்கள் அறிந்திருந்தனர். ஆனல் அதைப் பெருவாரியாகச் செய்யும் முறையை அவர்கள் உணர வில்லை. பாரடே ஏழாண்டுகள் இத்துறையில் உழைத்து, காந்தசக்தியைக் கொண்டு மின்சார சக்தியை உண்டாக்கும் முறையைக் கண்டறிந்தார். இம்முறையில் 'டைனமோ' என்ற இயந்திரம் அமைக்கவும், அதைக் கொண்டு மின்சாரம் உற்பத்தி செய்யவும் அவர் வழி கண்டு பிடித்தார். இது மின்சார

உலகிற்குப் பேருதவியாயிற்று. அவர் கண்டுபிடித்தவை மேலும் பல உண்டு. அவற்றைப்பற்றி நீங்கள் பெரியவர்களாகும்போது அறியலாம்.

பாரடே இளமைப் பருவத்தில் வறுமையில் கிடந்து வருந்தினர்; எவ்வளவு எளிதாயினும் கிடைத்த வேலையைத் திறமையுடன் செய்து முடித்துப் படிப்படியாக முன்னேறி உலகுக்குப் பேருதவி செய்தார்; தம் புகழை என்றென்றைக்கும் அழியாமல் நிலை நிறுத்தினர். அவரது மனப்பான்மையையே நாம் நன்கு அறியவேண்டும். பாரடேக்குப் பணத்தில் பற்று இல்லை; தாமென்னும் ஆணவமும் அவரிடம் இல்லை. தாம் ஏழைமையாய் வாழ்ந்த காலத்தை அவர் வாழ்நாள் முழுவதும் மறக்கவே இல்லை; தாம் ஏழ்மையாய் இருந்த காலத்தில் வேலை செய்த இடங்களுக்கெல்லாம் அடிக்கடி சென்று, அங்கு இருந்தவர்களோடு உறவாடினர். இவ்விதம் அறிவின் உயர்வும் மானிடப் பண்பும் நிறைந்த ஒருவரை உலகம் மறக்க இயலுமோ?

## அருஞ்சொற்பொருள்

நல் + உணவு = நல்லுணவு. ஓர் + அளவு = ஓரளவு; சிறிது அளவு. பணிக்களரி - தொழில் நிலையம், ஆராய்ச்சிச்சாலை. செருக்கு - கர்வம், அகங்காரம்.



## பயிற்சி

(1) வினாக்கள்

1. எவன் சிறந்தவன் என்று மைக்கேல் பாரடே கூறியுள்ளார்?

2. அவர் உலகுக்கு அளித்தது யாது?

3. அவருடைய இளமைக்காலம் எவ்வாறு கழிந்தது?

4. அவர் விஞ்ஞான அறிவைத் தொடக்கத்தில் எவ்வாறு வளர்த்துக்கொண்டார் ?

5. டேவி என்பவர் யார் ? அவருடன் பாரடேக்குத் தொடர்பு எவ்வாறு உண்டாயிற்று ?

6. பாரடே தம் விஞ்ஞானத் துறையில் மேன்மை அடைவதற்கு என்ன முயற்சி கொண்டார் ?

7. பாரடே ஏழாண்டுகள் உழைத்துக் கண்டறிந்த புதுமை யாது ?

8. பாரடேயின் இயல்புகள் யாவை ?

(2) இலக்கணம்

பெயரின் பொருளை வேற்றுமைப்படுத்துவது வேற்றுமை. அது முதலாம் வேற்றுமை முதல் எட்டாம் வேற்றுமை வரை எட்டு வகைப்படும்.

அவற்றுள் இரண்டாம் வேற்றுமை முதல் ஏழாம் வேற்றுமை வரை உள்ள ஆறு வேற்றுமைகளுக்கும் தனி உருபு உண்டு.

ஐ, ஆல், கு, இன், அது, கண் என்பன அவ்வேற்றுமைகளின் உருபுகள்.

முதல் வேற்றுமை என்பது, எழுவாயாக வரும் பெயர்ச்சொல். அழைக்கப்படும் பொருளில் வருவது எட்டாம் வேற்றுமை.

உதாரணம்: சாத்தன், சாத்தனை, சாத்தனால், சாத்தற்கு, சாத்தனின், சாத்தனது, சாத்தன்கண், சாத்தா.

இப்பாடத்தில் கடைசிப் பாராவிலுள்ள பெயர்ச்சொற்களை எடுத்தெழுதி, அவற்றில் வந்த வேற்றுமைகளைக் குறிப்பிடுக.

(3) கட்டுரை

பாரடேயின் இளமை, முதல் முயற்சி, முன்னேற்றம், திறமை—இத்தலைப்புக்களை அமைத்து அவருடைய வரலாற்றை ஒரு கட்டுரையாக எழுதுக.

# 10. எல்லோராக் குகைகள்

பண்டைக் காலத்தில் ஒரு முஸ்லிம் மன்னர் தம் தலைநகரை டில்லியிலிருந்து தேவகிரிக்கும், பிறகு தேவகிரியிலிருந்து டில்லிக்கும் மாற்றி மக்களிற் பலரை மடிய வைத்தார் என்ற வரலாற்றைக் கேட்டிருப் பீர்கள். அந்தத் தேவகிரி இப்பொழுது ஐதாரபாத்தி லுள்ள 'தௌலதாபாத்' என்னும் நகரமாகும். அதற்கருகில் மலைகள் சூழ்ந்த ஓரிடத்தில் எல் லோரா என்னும் ஒரு கிராமம் இருக்கிறது.

எல்லோராவுக்குச் செல்லவேண்டுபவர்கள் இருப் புப்பாதை வழியாக ஔரங்கபாத் என்னும் இடத்துக் குச் செல்லவேண்டும்; அங்கிருந்து தௌலதாபாத் வழியாகப் பதினாறு கல் தூரம் சென்றால், எல்லோ ராவை அடையலாம்.

அவ்விடத்தில் நாற்புறங்களிலும் குன்றுகள் சூழ்ந்துள்ளன. அவற்றிலிருந்து எழும் அருவி களின் ஒலியும், பறவைகளின் பாட்டும், மரங்கள் சூழ்ந்த குன்றுகளின் தோற்றமும், பள்ளதாக்கு களின் அமைதியும் நம் உள்ளத்தை எழுப்பி, இவ்வுல கங்களுக்கெல்லாம் அப்பாலுள்ள உயர்பொருளி னிடத்திலே பதியச் செய்யும். இவ்விதம் மனத்திற்கு ஓய்வையும் தெளிவையும் கொடுக்கும் மானிடர் நட மாட்டமில்லாத தனி இடத்திலே, ஏறக்குறைய இரண் டாயிரத்தைந்நூறு ஆண்டுகளுக்கு முன்னே, பௌத்த பிக்ஷுக்களும் சமண முனிவர்களும் வந்து தங்கித் தவம் புரிந்தார்கள். அவர்கள் ஆங்கிருந்த இயற்கைக் குகைகளையே தம் குடியிருப்பாக முதலிற்



எல்லோராக் குகைக் கோவில்

கொண்டனர். அவர்களிற் சிலர் சிற்பக்கலைகளை அறிந்தவர்களாதலின், பழைய குகைகளைப் பெருக்கி யும் புதிய குகைகளை வெட்டியும் அங்கே வசிக்க லாயினர். நாளடைவில் ஜைனர்களின் கூட்டம் குறையவே, பௌத்தர்களே அங்குத் தங்கியிருந்தனர். அவர்கள் குடைந்த குகைகள் பன்னிரண்டை இன்றும் எல்லோராவில் காணலாம்.

பௌத்த குகைகளில் இருவகை உண்டு: ஒன்று விகாரம்; மற்றது சைத்தியம். விகாரம் நடு விலே ஒரு கூடமும் அதைச் சூழ்ந்து அறைகளும் பெற்றிருக்கும். சைத்தியத்தில் தூண்களோடு கூடிய ஒரு சுற்றும், நடுமண்டபமும், அதன் கோடியில் ஒரு மூலத்தானமும் அதன்கண் ஒரு புத்த ஸ்தூபமும் இருக்கும்.

இப்பன்னிரண்டு குகைகளுள் ஒன்று நீங்கலாக மற்றவை யாவும் விகாரங்களே. இவற்றில் காணப் படும் தூண்களும் உருவங்களும் மிகுந்த வேலைப் பாடுகள் அமைந்தவை. இவை யாவும் மலைகளைக் குடைந்து செய்யப்பட்டவை யாதலால் என்றும் அழிவுறா. இரண்டு குகைகள் மூன்று மாடிகளைப் பெற்றிருக்கின்றன.

இவ்விடத்தில் முப்பத்து நான்கு குகைகளைக் காணலாம். இவற்றுள் முன் சொன்ன பன்னிரண் டும் பௌத்தர்களுடையவை; நான்கு ஜைனர்களுக்கு உரியவை; மற்றவை யெல்லாம் இந்துக்களுக்கு உரிமையானவை.

இக்குகைகள் ஒவ்வொன்றிலும் காணத்தக்க அழகுகள் பல உண்டு. இவற்றிற்கெல்லாம் பெரிய

தாய், மனிதரால் செய்யப்பெற்றதோ என்ற ஐயத்தை உண்டாக்குவதாய், உலக அற்புதங்களுள் ஒன்ருய் விளங்கும் தன்மையில் உள்ளது கயிலாயக் கோயில் என்ற பதினுருவது குகைக் கோயிலேயாகும்.

இஃது உண்டான வரலாற்றினைக் காண்போம்: எட்டாம் நூற்ருண்டிலே முதலாம் கிருஷ்ணன் என்ற இராஷ்டிரகூட மன்னன் பல பகைவர்களை வென்று வாகை சூடி விளங்கினுன். அவன் தன் வெற்றிக்கு அறிகுறியாகக் கயிலாயம் போன்ற ஒரு கோயிலை எல்லோராவில் குடைந்தெடுக்க வேண்டுமென்று உறுதி செய்தான். அதன் விளைவே கயிலாயக் கோயிலாகும்.

கயிலாயம் என்ருல் கயிலாயமாக இருத்தல் வேண்டுமே! பனிநிறைந்த இமாலயக் குன்றன்ருே கயிலாயம்! அதற்கேற்ற இடம் எல்லோராவே என்று அவன் கண்டான். ஜைன, பௌத்தக் குகைகளின் அருகிலே மிகப் பெரிய ஒரு குன்றையே கோயிலாகச் செதுக்குவதாக ஏற்பாடாயிற்று. பாரத நாட்டின் எல்லாப் புறங்களினின்றும் சிற்பிகள் அழைக்கப் பெற்றனர். அவர்களுக்கெல்லாம் எக்காலத்திலும் பயன்படும்படி மானியங்கள் விடப்பட்டன. அவர்கள் தங்கி வேலை செய்ய ஒரு கிராமம் எழுந்தது. கற்களை அப்புறப்படுத்தப் பல யானைகள் தயாராயின. நல்ல நாளில் வேலை தொடங்கிற்று. கல்தச்சர், குன்றின் மேல் ஒரு சமமான இடத்தில் 250 அடி நீளமும் 160 அடி அகலமும் உள்ள நாற்கோணமாக ஓர் இடத் தைக் குறித்துக்கொண்டனர்; அதைச் சுற்றி 150 அடி ஆழத்திற்கு இரு யானைகள் ஒன்றன்மேல் ஒன்று

படாமல் நடக்கும் அகலத்திற்குப் பள்ளம் தோண்டிக் கற்களை அப்புறப்படுத்தினர்.

இவ்வாறு சதுரிக்கப்பட்ட பாறையே கோயிலாக அமைய வேண்டும். இப்பாறையில் கோயிலுக்குரிய அடித்தளம், தூண்கள், சுவர்கள், மண்டபங்கள், கடவுளர் இருப்பதற்கு அறைகள், உருவங்கள் முதலியன பல உளிகளால் சாஸ்திர முறைப்படி செதுக்கி எடுக்கப்படவேண்டும். எத்தனை ஆயிரம் சிற்பிகள் எத்தனை ஆண்டுகள் செதுக்கினர்களோ! இவ்வாறு முதலில் வெளிப்புறங்களும் பிறகு உட்புறமும் கலைநுட்பங்கள் சிறிதும் குறையாமல் உளியினால் செதுக்கி அமைக்க எவ்வளவு அறிவும் பொறுமையும் வேண்டும்! ஆயிரக்கணக்கான சிற்பிகள் பாறையைச் செதுக்கும்போது எழும் அமலையும், கூலியாட்களின் கூச்சலும், யானைகளின் பிளிறலும், ஓயாமல் ஒழியாமல் பல ஆண்டுகள் முழங்கின. இமயக் கோயிலில் காணுதற்குரிய தேவ வடிவங்கள், விலங்கு உருவங்கள், பறவைகள் பாம்புகள் பூச்சிகள் இவற்றின் வடிவங்கள், செடி, கொடி, மரம், பூ, மாலை இவற்றின் பிரதிகள் யாவும் அங்குக் காட்டப்பெற்றன. சுவர்களில் சில புராணக் கதைகள் செதுக்கப்பட்டன.

இவ்வாறு பற்பல ஆண்டுகள் கடந்து, இதனைத் தொடங்கின கிருஷ்ண மன்னனும் மாண்டுபோன பின்பே, உலக அற்புதமான இக்கற்கோயிலுக்கு வைதிக முறைப்படி கும்பாபிஷேகம் நடந்தது.

இக்கோயிலில் பல பகுதிகள் இருக்கின்றன. ஒரு தளத்தில் ஓர் ஆயிரக்கால் மண்டபமும் அதற்குஅடுத்த மேல் தளத்தில் மற்றோர் ஆயிரக்கால் மண்டபமும்,

அதற்கு நேர்த் தென்திசையில் மற்றொரு மண்டபமும் உள்ளன. நந்தி விமானமும், கைலாய நாதருடைய விமானமும், இராவணன் கோயிலும் பார்க்கப் பார்க்க வியப்பானவை. கைலாய விமானத்தைப் பல கல்யானைகள் சூழ்ந்து சுமந்துகொண்டிருக்கின்றன. தூண்களில் பற்பல சிற்ப வேலைப்பாடுகள் நிறைந்துள்ள ஒவ்வொரு தூணும் 49 அடி உயரமுள்ளது. தூண் ஒவ்வொன்றின் அடியிலும் ஒவ்வொரு யானையும், முடியிலே முத்தலைச் சூலமும் விளங்குகின்றன. சரசுவதி, கங்கை, யமுனை என்ற மூன்று ஆறுகளும் கைலாய உச்சியிலிருந்து இறங்குவன போலக் காட்ட உருவங்கள் செதுக்கப்பட்டுள்ளன. இன்னும் பிள்ளையார், முருகன், உமையம்மை போன்ற தெய்வங்களுக்கும் இங்குக் கோயில்கள் உண்டு. சுவர்களிலும் கூரைகளிலும் கணக்கற்ற இயற்கைத் தோற்றங்களும், புராணக் கதைகளும் கண்ணைக் கவரும் முறையில் செதுக்கப்பட்டுள்ளன.

இவை யாவும் மனிதருடைய வேலைகளோ என ஐயுறும்படி அமைந்துள்ளன. இவை பார்க்கப் பார்க்கத் தெவிட்டாதவை; வியக்குந் தோறும் வியக்குந் தோறும் வியப்பை அளிப்பவை; ஆயிரத்து முந்நூறு ஆண்டுகளுக்குமுன், உலகத்தின் பெரும் பகுதி இருளில் குடியிருந்த அக்காலத்தில், நம் மூதாதைகள் எவ்வளவு கலைத்திறம் பெற்றிருந்தனர் என்பதைக் காட்ட அறிகுறிகளாக அமைந்தவை. நாம் அவர்களின்பின் வந்துள்ளோம். நம் கடமைகள் யாவை?

## அருஞ்சொற்பொருள்

மடியவைத்தார் - இறக்கவைத்தார். அழிவு + உரு = அழிவுரு- அழியமாட்டா. ஐயம் - சந்தேகம். கயிலாயம் - சிவபெருமான் தங்கிவாழும் வெள்ளிமலை; அது இமயமலையின் ஒரு பகுதி. சிற்பி - மண், கல் முதலியவற்றில் உருவங்களை அமைக்கும் தொழிலாளி. மானியங்கள் - வரியில்லாது அநுபவிக்கும் நிலங்கள். அமலை - ஒலி. நம் மூதாதைகள் - நம் முன்னோர்கள். வியப்பு - ஆச்சரியம்.

## பயிற்சி

### (1) வினாக்கள்

1. எல்லோராவுக்கு உன் ஊரிலிருந்து செல்லும் வழியைக் குறி.
2. அவ்விடத்தின் இயற்கைத் தோற்றத்தைச் சில வாக்கியங்களில் வரைக.
3. சைத்தியம், விகாரம் இவற்றின் வேற்றுமை என்ன?
4. கயிலாயநாதர் கோயில் கட்டப்பெற்ற வரலாறு யாது?

### (2) இலக்கணம்

1. பின்வரும் சொற்களைப் புணர்த்திக் காட்டுக :—

| | |
|---|---|
| பூ + கோயில் | கல் + குகை |
| பூ + சோலை | கணக்கு + அற்ற |
| வாழை + பழம் | பல + பல |

2. பின்வருவனவற்றைப் பிரித்தெழுதுக :—

| | |
|---|---|
| ஒவ்வொன்று | குடியிருப்பு |
| பன்னிரண்டு | எக்காலத்திலும் |

### (3) கட்டுரை

கயிலாயக் கோயிலைக் கண்டு அதனை வியந்து உன் நண்பனுக்கு எழுதுவது போல் ஒரு கடிதம் எழுதுக.

# 11. பழகா நட்பு—I

## ஒரு நாடகம்

### காட்சி 1

இடம் : பிசிர் என்ற ஊரின் குளக்கரை

காலம் : அந்திவேளை.

பாத்திரம் : ஆந்தையார் என்ற புலவர். [அவர் மாலைப் பொழுதில் செய்யவேண்டிய கடமைகளை முடித்துவிட்டு வானத்தை நோக்குகிறார். இரண்டு அன்னப் பறவைகள் வானத்தில் பறக்கின்றன.]

ஆந்தையார் : அன்னச் சேவலே! அன்னச் சேவலே! நீயும் உன் மனையியும் தென்றிசைக் குமரியில் நீராடி இமயத்திற்குத் திரும்புகிறீர்கள் என்றெண்ணுகிறேன். அப்படியானால் ஒன்று சொல்வேன், கேளுங்கள் : இடைவழியிலே எம் கோன் கோப்பெருஞ் சோழன் வாழும் உறையூரில் தங்கிச் செல்லுங்கள் ; அவன் அரண்மனையுட் புக யாரையும் கேட்க வேண்டுவதில்லை ; 'பிசிராந்தையினிடமிருந்து வருகிறோம்' என்று சொல்வது போதும். அப்பொழுது அவனே வெளிவந்து உங்களை உபசரிப்பான் ; உன் பேடு அணிய ஒரு நன்கலனும் கொடுப்பான்.

(அருகில் ஒருவர் வந்து)

ஒருவர் : ஐய, வணக்கம்.

ஆந்தையார் : வணக்கம். தாங்கள் யார்?

ஒருவர் : நான் சோழ நாட்டினன் ; பொதியமலைக்குச் சென்று திரும்புகிறேன். இங்கு அந்தி வேளை வந்துவிட்டது......

ஆந்தையார் : அப்படியாயின் நீர் என் இல்லத்திற்கு வந்து தங்கலாம். நீர் சோழ நாட்டவர் என்கிறீர். நும் வரவு நல்வரவு ஆகுக. எம் இறைவன் கோப்பெருஞ் சோழன் நலமோ ?

ஒருவர் : நலமே ! தாங்கள் ஆந்தையாரோ ?

ஆந்தையார் : என் பெயரை நீர் எவ்வாறு அறிவீர் ?

ஒருவர் : எம் ஊரிற் புலவர் குழாங்களிடையே தங்கள் பெயர் அடிக்கடி பேசப்படுவதைக் கேட்டிருக்கிறேன்.

ஆந்தையார் : நான் ஒரு முறையும் அங்கு வந்தது இல்லையே !

ஒருவர் : மன்னர் அடிக்கடி தங்கள் பெயரைச் சொல்வராம். பொத்தியார், எயிற்றியனூர் போன்றவர் தம்முள் உரையாடும்போது 'பழகா நட்பு'க்கு எடுத்துக்காட்டாகத் தங்களையும் மன்னவரையும் சேர்த்துச் சொல்வதுண்டு. தாங்கள் அன்னச்சேவலுக்குச் சொன்ன செய்தியை நான் கேட்டேன் ; தாங்களே ஆந்தையாராக இருக்கக் கூடும் என்று எண்ணினேன்.

ஆந்தையார் : நீர் எண்ணியது உண்மையே. எனக்கும் சோழனுக்கும் நட்பு எவ்வாறு உண்டாயிற்று என்பதை நான் அறியேன். நல்லது ; அவன் மக்கள் முதலியோர் நலமோ ?

ஒருவர் : நலமே. எனினும் அவர்களுக்குத் தந்தையோடு ஒத்துப் போகும் நற்குணம் உண்டாகவில்லை.

ஆந்தையார் : அப்படியா ! நீர் சோழன் அரண்

மனைச் செய்திகளையெல்லாம் நன்கு அறிவீர் போலும்! உம்மைச் சந்திக்க நேர்ந்ததும் நற் காலமே. நாம் இல்லத்திற்குப் போவோம், வாரும்; உணவு அருந்திவிட்டுப் பேசுவோம்.

## காட்சி 2

இடம் : உறையூர்.

காலம் : பிற்பகல்.

பாத்திரங்கள் : கோப்பெருஞ்சோழன், பொத்தியார், எயிற்றியனார்.

பொத்தியார் : மன்னரே, தங்கள் சொல்லுக்குக் குறுக்குச் சொல்லுவதாக நினைத்தலாகாது. நாம் பல நல்லிடங்களைக் கண்டு வருவோம். அதனால் மன அமைதி உண்டாக வழியுண்டு.

சோழன் : புலவர் பெரும, உங்கள் கருத்தை நான் நன்கு அறிவேன். நல்லிடங்களைச் சுற்றி வருதற்கு மனத் தெளிவு வேண்டும். அஃது எனக்கு இல்லை. மானமும் வெறுப்பும் நிரம்பிய யான் இப்போது தெளிவுடையேன் அல்லேன். அன்றியும் என் போன்ற மன்னன் பிறர் நாடு கடந்து செல்வதென்பது தகாது. நான் செய்த முடிவே முடிவு. நீங்கள் காவிரிக் கரையில் புனிதமான இடமொன்றைத் தேர்ந்தெடுங்கள். நாளைக்காலை நான் வடக்கிருத்தல் திண்ணம்.

எயிற்றியனார் : யானே இக்கொடுமைக்குக் காரணம்; மிகவும் வருந்துகிறேன்.

சோழன் : எயிற்றியனாரே! நீர் செய்த உதவிக்கு நான் என்ன கைம்மாறு செய்வேன்! என்மீது

பகைத்தெழுந்த மக்களின்மீது நான் போருக்கெழுந்தபோது எனக்கு நற்சொல் கூறி, என் குலத்துக்கும் இழிவு வராமற் காத்த பெருமை உம்முடையதன்றே! நீர் நல்லுரை கூறியிரா விட்டால் இந்நேரத்திற்குள் சோழர் குலம் மாசுற்றிருக்குமே! உம் உதவியை நான் மறப்பேனே?

**பொத்தியார் :** வடக்கிருத்தலை மாற்ற வழி இல்லையோ?

**சோழன் :** இல்லை; இஃதொன்றிலாவது என் எண்ணம் நிறைவேறட்டும்.

**பொத்தியார் :** அப்படியானால் நானும் உடன் வடக்கிருக்க இடந் தருக.

**சோழன் :** வேண்டா. உம் மனைவி கருவுற்றிருக்கிறாள். இந்நிலையில் நீர் வடக்கிருத்தலாகாது. என்னுடன் வடக்கிருக்க ஒருவன் வருவான்; அவனுக்கிருக்க இடம் அமையுங்கள்.

**எயிற்றியனார் :** அப்பேறுடையவன் யாவனோ?

**சோழன் :** என் ஆந்தையைத்தான் கூறினேன்.

**பொத்தியார் :** தாங்கள் ஆந்தை, ஆந்தை என்கிறீர்கள்; அவரைத் தாங்கள் கண்டதும் இல்லையே!

**சோழன் :** நன்று சொன்னீர்! எங்கள் நட்பின் திறத்தை யாரே அறிவர்! நான் வேறு, அவன் வேறு அல்லோம். அவன் செல்வக்காலையில் வரா விட்டாலும், அல்லற்காலையில் வரத்தவறான். நீங்கள் இதனை நாளைக் காண்பீர்கள். நீங்கள் இப்போது போய் நாளை வந்துவிடுங்கள்.

# 12. பழகா நட்பு–II

## காட்சி 3

இடம் : மதுரைப் பெருவழி.
நேரம் : இரவு.
பாத்திரம் : பிசிராந்தையார் (வருகிருர்)

பிசிராந்தையார் : வானத்திலுள்ள விண்மீன்களை நோக்கின், இவ்வேளை நள்ளிரவு வேளையாகத் தோன்றுகிறது. நான் விடிவதற்குள் உறையூரை அடைய முடியுமோ, அறியேனே! என் மன்னனுக்கு ஏதோ ஒரு பெருந்துன்பம் விளைந்து விட்டதென்பது மட்டும் எனக்குத்தோன்றுகிறது. அஃது எத்தகையது என்பது தெரியவில்லை. என்னுயிரும் வர்வரத் தேய்ந்துவருகிறது. அவன் போன பின் நான் மட்டும் உடலோடு வாழ வேண்டுமோ?......அவனைக் கண்ணுல் உயிருடன் காணப் பெற்ருல் போதும்......நிலவு நன்ருக ஒளி வீசுகிறது......நடை வருத்தம் தெரியவில்லை......ஓடிச் செல்கிறேன்.

## காட்சி 4

இடம் : காவிரிக்கரை.
காலம் : காலை.
பாத்திரங்கள் : அரசர், அமைச்சர், புலவர், நகர மக்கள் முதலியோர்.

அரசர் : புலவர்களே! அமைச்சர்களே! நண்பர்களே! ஏன் ஒதுங்கி நிற்கிறீர்கள்! எல்லோரும் என்னைச் சூழ இருங்கள். நான் இறுதிப் பயணம்

செல்லப்போகின்றேன். வீரனுகப் பிறந்தவன் போரில் விழுப்புண் பெற்று இறக்கவேண்டும், அல்லது வடக்கிருந்து உயிரைத் துறக்க வேண்டும். நான் நல்ல மரணத்தையே அடையப் போகிறேன். இனி நான் உண்பதோ, உறங்கு வதோ, நீர் அருந்துவதோ கூடாது. என் பெரி யோர்களின் அருளால் எனக்குத் துன்பத்தைப் பொறுத்துக் கொள்ளும் ஆற்றல் உண்டு. நீங்கள் அமைதி பெறுக.

**அமைச்சர் :** ஐயோ! நமது நாடு கதறுகின்றதே!

**அரசர் :** அமைச்சரே!.........ஆ! இனி அரசனு மில்லை, அமைச்சருமில்லை......... நண்பரே, நீருமா கோழை மனத்தராகிவிட்டீர்? கோழை மனத்தவரெல்லோரும் அவர்கள் இல்லத்துக்குச் சென்று சுகமே வாழுங்கள்.

... ... ... ...

நண்பர் பொத்தியாரே! கண் சுழலுகிறது! என் பிசிராந்தை வந்தனனே? அவன் எப்படியும் வந்தே தீருவான்......ஆனல், அவனைக்...... காண..........என்னல்.........இயலுமோ.......... அறியேன்.

(கண்ணை மூடுகிறர்)

**பிசிராந்தையார் :** (ஓடி வந்து) என் ஆருயிர்த் தோழ! இந்நிலையிலோ நான் உன்னைக் காண நேர்ந்தேன்! கோழியூரனே!......'உன் பெயர் யாது?' என்று கேட்பவருக்கு, நான் 'கோப் பெருஞ் சோழன்' என்று சொல்லி இறுமாந்திருந் தேனே!

அரசர் : (கண்களை விழித்து) என்......பிசிராந்தையா! ......வந்தாயா......வா......போவோம்.

(இருவரும் உயிர் விடுகின்றனர்)

பொத்தியார் : என்ன வியப்பு! நினைக்கக்கூட முடியவில்லையே! மன்னன் வடக்கிருக்கத் துணிந்ததையும் அவ்வாறே உயிர் விட்டதையும் வியப்பேனோ? நட்பாளன் வருவான் என்று சொன்ன அவன் உறுதியை வியப்பேனோ! அவன் சொன்னவண்ணம் புலவர் வந்ததை வியப்பேனோ? இருவரும் ஒருமிக்க இறந்ததை வியப்பேனோ? நான் எதை வியப்பேன்!

ஒரு புலவர் : இத்தகைய மன்னவனையும் புலவரையும் இழந்த உலகம் வறுமையுற்றது.

மற்றொரு புலவர் : இவ்விரு சான்றோரையும் ஒருமித்துக் காண நாம் என்ன பேறு பெற்றோம்! பொன்னும், மணியும் வெவ்வேறிடங்களில் பிறந்தாலும் அணிகலனாகும்போது அவை ஒன்றுபடுவனபோல் சோழ நாட்டு மன்னரும் பாண்டி நாட்டுப் புலவரும் ஒருங்கே கூடினர். இதுவே பெருவியப்பு.

அமைச்சர் : மக்காள், சோழ நாடு தன் ஒளியை இழந்துவிட்டது. இனி இதன் நிலை யாதாகுமோ? இன்று நம் கண்முன் விண்ணேறிய புவியரசர், கவியரசர் ஆகிய இருவரையும் நாம் போற்றுவோம்; இணையற்ற நட்புக்கு அறிகுறியாக இங்கு ஒரு கோயில் எழுப்புவோம்.

(அனைவரும் போகின்றனர்)

காட்சி முடிந்தது.

### அருஞ்சொற்பொருள்

தென்றிசை - தென் + திசை. கோன் - அரசன். பேடு - பெண்பறவை. நன்கலன் - நல்ல ஆபரணம். இறைவன் - அரசன். குழாம் - கூட்டம். நல்லிடம் - நல் + இடம் = நல்ல இடம். வடக்கிருத்தல் - தனி ஓரிடத்தில் வடக்கு நோக்கியமர்ந்து உண்ணுமலும் நீர் குடிக்காமலுமிருந்து உயிர் விடுதல். கைம்மாறு- பிரதி உபகாரம். பேறு - பாக்கியம். அல்லற்காலை - துன்பம் வந்தபோது. விண்மீன்-நட்சத்திரம். விழுப்புண்-வீரத்திற்கறிகுறியான காயம். இறுதிப்பயணம் - மரணம். அணிகலன் - ஆபரணம்.

### பயிற்சி

(1) வினுக்கள்

1. வடக்கிருத்தல் என்பது என்ன ?
2. ஆந்தையார் அன்னத்தினிடம் கூறியதென்ன ?
3. பொத்தியாரை ஏன் அரசன் தன்னுடன் வடக்கிருத்தல் கூடாது என்றனன் ?
4. எயிற்றியனுர் அரசர்க்குச் செய்த உதவி யாது ?
5. பொத்தியார் எவற்றைக் கண்டு வியந்தார் ?
6. பொன்னும் மணியும் ஒருங்கு சேர்ந்தது எதற்கு உவமை?

(2) இலக்கணம்

ஒருவர் சொல்வதை அப்படியே நாம் சொல்லுவது நேர்க் கூற்று. அதனை எழுதும்போது, "——" இவ்வாறு மேற்கோள் குறிகளை இடுகிறோம். இப்பாடம் முழுமையும் நேர்க்கூற்று முறையில் இருப்பதால் இப்புள்ளிகள் இடப்படவில்லை.

வினுக்களுக்கு ? என்னும் குறியையும், வியப்பைக்காட்ட ! என்னும் குறியையும் நாம் இடுகிறோம். கருத்து முடிந்த சொற்ருெடர் இறுதியில் இக்குறியை இடுகிறோம்.

பின்வரும் பாராவில் அந்தக் குறிகளை உரிய இடங்களில்இடுக :—

காந்தியார் அம்மையிடம் பலவிதங்களிற் பேசலுற்ருர் மருகிகள் வருங்காலம் எங்கே இருக்கிறது அதற்கு இப்பொழுது என்ன கவலை என்று கேட்டார்.

(3) கட்டுரை

1. நண்பர் இருவர் ஆபத்தில் ஒருவர்க்கு ஒருவர் உதவியதாக நீ அறிந்த கதை ஒன்று எழுதுக.
2. ஆபத்துக்கு உதவாத நண்பனைப் பற்றி ஒரு கதை எழுதுக.
3. இவ்விரு பாடங்களில் வந்துள்ள செய்தியைச் சுருக்கி ஒரு கட்டுரையாக வரைக.

# செய்யுள்

## I. கடவுள் வாழ்த்து

பொன்னும் மெய்ப்பொரு ளுந்தரு வானைப்
போக முந்திரு வும்புணர்ப் பானைப்
பின்னை என்பிழை யைப்பொறுப் பானைப்
பிழையெ லாந்தவி ரப்பணிப் பானை
இன்ன தன்மைய னென்றறி யொண்ணா
எம்மா னையெளி வந்த பிரானை
அன்னம் வைகும் வயற்பழ னத்தணி
ஆரூ ரானை மறக்கலு மாமே ! (1)

—சுந்தரமூர்த்தி நாயனார்

‘ பச்சைமா மலைபோல் மேனி
பவளவாய் கமலச் செங்கண்
அச்சுதா ! அமர ரேறே !
ஆயர்தம் கொழுந்தே ’ என்னும்
இச்சுவை தவிர யான்போய்
இந்திர லோக மாளும்
அச்சுவை பெறினும் வேண்டேன்
அரங்கமா நகரு ளானே ! (2)

—தொண்டரடிப்பொடி யாழ்வார்

# II. நீதி

## 1. நீதி வெண்பா

### உயர்வு பிறப்பிடத்தாலன்று

தாமரைபொன் முத்துச் சவரங்கோ ரோசனைபால்
பூமருந்தேன் பட்டுப் புனுகுசவ்வா—தாமழல்மற்
றெங்கே பிறந்தாலும் எள்ளாரே; நல்லோர்கள்
எங்கே பிறந்தாலும் என்? (1)

### உணவு கொள்ளும் பொழுதுகள்

ஒருபோது யோகியே; ஒண்டளிர்க்கை மாதே!
இருபோது போகியே யென்ப;—திரிபோது
ரோகியே; நான்குபோ துண்பான் உடல்விட்டுப்
போகியே யென்று புகல். (2)

### நா நயம்

நாவின் நுனியில் நயமிருக்கில் பூமாதும்
நாவினிய நல்லோரும் நண்ணுவார்—நாவினுனி
ஆங்க டினமாகில் அத்திருவும் சேராள்முன்
ஆங்கே வருமரணம் ஆம். (3)

### துர்ச்சனருக்கு உடம்பு முழுதும் விடம்

ஈக்கு விடந்தலையில், எய்துமிருந் தேளுக்கு
வாய்த்த விடங்கொடுக்கில் வாழுமே—நோக்கரிய
பைங்கணர வுக்குவிடம் பல்லளவே; துர்ச்சனருக்
கங்கமுழு தும்விடமே யாம். (4)

### தீயோரைக் கண்டால் தூர விலகவேண்டும்

கொம்புளதற் கைந்து; குதிரைக்குப் பத்துமுழம்;
வெம்புகரிக் காயிரந்தான் வேண்டுமே ;—வம்புசெறி
தீங்கினர்தங் கண்ணில் தெரியாத தூரத்து
நீங்குவதே நல்ல நெறி. (5)

### பிறந்த விடத்தில் சிறப்புப் பெருதவை

ஆனே மருப்பும் அருங்கவரி மான்மயிரும்
கான வரியுகிரும் கற்ருேரும்—மானே !
பிறந்தவிடத் தன்றிப் பிறிதொருதே சத்தே
செறிந்தவிடத் தன்ருே சிறப்பு. (6)

### போலி மனிதர்

கற்பூரம் போலக் கடலுப் பிருந்தாலும்
கற்பூர மாமோ ,கடலுப்பு—பொற்பூரும்
புண்ணியரைப் போல இருந்தாலும் புல்லியர்தாம்
புண்ணியரா வாரோ புகல். (7)

### சிற்றுணர்வோரும் முற்றுணர்வோரும்

சிற்றுணர்வோர் என்றுஞ் சிலுசிலுப்பர்'ஆன்றமைந்த
முற்றுணர்வோர் ஒன்றும் மொழியாரே—வெற்றி
பெறும்
வெண்கலத்தின் ஓசை மிகுமே விரிபசும்பொன்
ஒண்கலத்தில் உண்டோ ஒலி? (8)

### பொருளால் வருந்துன்பம்

இன்னல் தரும்பொருளை ஈட்டுதலுந் துன்பமே
பின்னதனைப் பேணுதலுந் துன்பமே—அன்ன
தழித்தலுந் துன்பமே; அந்தோ பிறர்பால்
இழத்தலுந் துன்பமே யாம். (9)

### தனித்து உண்டலின் தீமை

தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் என்றிவரோ
டின்புறத்தான் உண்டல் இனிதாமே—அன்புறவே
தக்கவரை யின்றித் தனித்துண்டல் தான்கவர்மீன்
கொக்கருந்தல் என்றே குறி. (10)

## 2. நீதிநெறி விளக்கம்

### கல்வி அழகே அழகு

கற்றோர்க்குக் கல்வி நலனே கலன்அல்லால்
மற்றோர் அணிகலம் வேண்டாவாம் ;—முற்ற
முழுமணிப் பூணுக்குப் பூண்வேண்டா ; யாரே
அழகுக் கழகுசெய் வார். (1)

### பொருளில் அமைதி ; கல்வியில் அவா

தம்மின் மெலியாரை நோக்கித் தமதுடைமை
அம்மா பெரிதென் றகமகிழ்க ;—தம்மினும்
கற்றாரை நோக்கிக் கருத்தழிக ; கற்றவெலாம்
எற்றே இவர்க்குநாம் என்று. (2)

### புகழ் பெற வழி

பிறரால் பெருஞ்சுட்டு வேண்டுவான் யாண்டும்
மறவாமே நோற்பதொன் றுண்டு ;—பிறர்பிறர்
சீர்எல்லாம் தூற்றிச் சிறுமை புறங்காத்து
யார்யார்க்கும் தாழ்ச்சி சொலல். (3)

### உறவினரை ஆதரித்தல்

வாங்கும் கவளத் தொருசிறிது வாய்தப்பின்
தூங்கும் களிறோ துயருறா—ஆங்கதுகொண்(டு)
ஊரும் எறும்பிங் கொருகோடி உய்யுமால்
ஆரும் கிளையோ டயின்று. (4)

கருமமே கண்

மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்துஞ்சார்
எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார்—செவ்வி
அருமையும் பாரார் அவமதிப்பும் கொள்ளார்
கருமமே கண்ணுயி னர். (5)

—குமரகுருபரர்

## 3. திருக்குறள்

கடவுள் வாழ்த்து

அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு. (1)

வான் சிறப்பு

வானின் றுலகம் வழங்கி வருதலால்
தானமிழ்த மென்றுணரற் பாற்று. (2)

நீத்தார் பெருமை

செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார். (3)

அறன் வலியுறுத்தல்

மனத்துக்கண் மாசில னாதல் லனைத்தறன்
ஆகுல நீர பிற. (4)

இல்வாழ்க்கை

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந்
தெய்வத்துள் வைக்கப் படும். (5)

### வாழ்க்கைத் துணை நலம்

தெய்வந் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை. (6)

### புதல்வரைப் பெறுதல்

குழலினி(து) யாழினி தென்பதம் மக்கள்
மழலைச்சொற் கேளா தவர். (7)

### அன்புடைமை

அன்பிலா ரெல்லாந் தமக்குரிய ரன்புடையார்
என்பு முரியர் பிறர்க்கு. (8)

### விருந்தோம்பல்

இருந்தோம்பி யில்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு. (9)

### இனியவை கூறல்

இனிய வுளவாக வின்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று. (10)

### செய்ந்நன்றியறிதல்

நன்றி மறப்பது நன்றன்று நன்றல்ல
தன்றே மறப்பது நன்று. (11)

### நடுவு நிலைமை

தக்கார் தகவில ரென்ப தவரவர்
எச்சத்தாற் காணப் படும். (12)

அடக்கமுடைமை

தீயினாற் சுட்டபு ணுள்ளாறு மாறாதே
நாவினாற் சுட்ட வடு. (13)

ஒழுக்கமுடைமை

உலகத்தோ டொட்ட வொழுகல் பலகற்றும்
கல்லா ரறிவிலா தார். (14)

பொறையுடைமை

அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்தல் தலை. (15)

அழுக்காறாமை

அறனாக்கம் வேண்டாதா னென்பான் பிறனாக்கம்
பேணா தழுக்கறுப் பான். (16)

புறங்கூறாமை

அறஞ்சொல்லு நெஞ்சத்தா னன்மை புறஞ்சொல்லும்
புன்மையாற் காணப் படும். (17)

பயனில சொல்லாமை

சொல்லுக சொல்லிற் பயனுடைய ; சொல்லற்க
சொல்லிற் பயனிலாச் சொல். (18)

தீவினையச்சம்

மறந்தும் பிறன்கேடு சூழற்க ; சூழின்
அறஞ்சூழும் சூழ்ந்தவன் கேடு. (19)

ஒப்புரவறிதல்

ஒத்த தறிவா னுயிர்வாழ்வான் ; மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும். (20)

ஈகை

நல்லா றெனினுங் கொளறீது ; மேலுலகம்
இல்லெனினு மீதலே நன்று. (21)

புகழ்

தோன்றிற் புகழொடு தோன்றுக ; அஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று. (22)

அருளுடைமை

அருளிலார்க் கவ்வுலக மில்லை ; பொருளிலார்க்
கிவ்வுலக மில்லாகி யாங்கு. (23)

கள்ளாமை

களவினு லாகிய வாக்க மளவிறந்
தாவது போலக் கெடும். (24)

வாய்மை

வாய்மை யெனப்படுவ தியாதெனின் யாதொன்றும்
தீமை யிலாத சொலல். (25)

வெகுளாமை

தன்னைத்தான் காக்கிற் சினங்காக்க ; காவாக்கால்
தன்னையே கொல்லும் சினம். (26)

# III. பஞ்சதந்திரக் கதைகள்

## 1. வேடன் கதை

(1)

வனமொன் றி லொருவேடன் வளர்குருவிக் கூட்டினெடும்
இனமொன்று வேட்டைக்கரு விகளுமெடுத் தேதிரியக்
கனமிருண்டு மழைபெய்யக் காற்றெழும்ப அவனடுங்கி
மனமருண் டோர் மரத்தின்கீழ் வந்திருந்தான். அப்போது,

(2)

தங்குமதன் மேலிருந்த புருவொன்று தன்பேட்டை,
'எங்ககன்ற தோவனத்தில்! யாரேனும் பிடித்தாரோ!
மங்கியதோ!' எனப்புகல, அதுகேட்டு வனசரன்றன்
அங்கையுறு கூட்டிலுற்ற பெண்புரு அழுதுசொலும் :

(3)

'முன்வினையா லிதுபெற்றே னயினும்நின் மனையடைந்த
இன்னவனுக் குபகாரம் புரி,' எனலும், எரிகொளுவி
அன்னவனை அழைத்துடலின் குளிர்போக்கி, 'ஆகாரம்
என்னைநீ அருந்(து),' என்று வீழ்ந்திறக்க, இவன்நோக்கி,

(4)

'அன்பினல் நம்பொருட்டு வீழ்ந்தஇதை அருந்தியிடில்
துன்பம்வரும்,' எனப்பேட்டை விடுத்திடலும்,சூழ்ந்ததுவும்
தன்புருடன் பிரிவதனல் வீழ்ந்திறக்கத் தருமிரண்டும்
இன்பமுறு தெய்வவுரு எய்திவா னுலகடைந்த.

(5)

இரக்கமொடு வேடுவனும் எரிவீழ்ந்து கதியடைந்தான் ;
தரைக்குளுளம் தளர்ந்துசர ணர்த்தியென்று சார்ந்தார்க்கும்
புரக்கஅருள் செயின்தாமே பொன்றவரி னும்வருமென்
றுரைத்துப்பொன் எச்சமிடும் பறவைகதை யோதுமால்.

## 2. காகம் பாம்பைக் கொன்றது

கோடுறு கிளையில் காகம்
கூடுவைத் தநேக காலம்
பேடொடு கூடி வாழும்
பெருமரப் பொந்தில் வந்தே
ஆடிய கரும்பாம் பொன்றங்
கஃதிடும் முட்டை யெல்லாம்
நாடியே குடித்துப் போக,
நலிந்துளம் மெலிந்து வாடி, (1)

தன்னுயிர்ப் பாங்க ஞன
சம்புக னருகு போயிங்(கு)
என்னசெய் குவன்யான் என்ன,
"இதைக்கொலல் அரிதோ நீபோய்
மன்னவன் தேவி யாடும்
மஞ்சனச் சாலை புக்குப்
பொன்னணி கொண்டு வந்து
போடுக பொந்தி" லென்ன, (2)

காகமப் படியே செய்யக்
காவல னேவ லாளர்
ஏகிமா மரத்தின் பொந்தை
யீர்ந்தனர் ஈரும் போதில்
நாகமங் கிருந்து சீற
நறுக்கினர் இருதுண் டாக;
ஆகையால் உபாயத் தாகா
அருஞ்செயல் ஏதும் இன்றே. (3)

## 3. வழித்துணை

நாசிக தேயந் தன்னில்
நண்ணிய தத்த னென்பான்
தேசிகன் கரும முற்றச்
செல்வனோர் ஊர்க்கென் றேத
ஏசுரு வன்னை நீநற்
றுணையொடு மேகு கென்றாள்
பேசுறும் துணையின் றென்னப்
பின்னுமவ் வன்னை எண்ணி, (1)

அலவனைக் கலசத் துட்பெய்
தவன்கையி லளிக்கக் கொண்டு
செலும்பொழு திளைப்பா யாங்கோர்
செழுந்தரு நிழலில் தூங்க,
நலிதர இவனைத் தீண்ட
நல்லர வொன்று நண்ணிக்
கலசமுள் தலையை நீட்டக்
கர்க்கட கம்தான் கண்டே, (2)

காரர வெனநி னைந்து
கடுங்கொடுக் காலி டுக்கி
மாரணம் செய்யப் பின்னர்
மறையவன் விழித்துப் பார்த்துப்
பேரர வதனைக் கொன்ற
தாரெனப் பெரிதும் எண்ணித்
தேருறு பொழுது நண்டால்
செத்ததீ தெனத்தெ ளிந்தான். (3)

# IV. பலசுவை

## (1) தொழிற்பாடல்

### மழைக்குறி

ஆற்றுவெள்ளம் நாளைவரத் தோற்றுதேகுறி—மலை
யாளமின்னல் ஈழமின்னல் சூழ மின்னுதே ;
நேற்றுமின்றும் கொம்புசுற்றிக் காற்றடிக்குதே–கேணி
நீர்ப்படு சொறித்தவளை கூப்பிடுகுதே ;
சேற்றுநண்டு சேற்றில்வளை ஏற்றடைக்குதே—மழை
தேடியொரு கோடிவானம் பாடி யாடுதே ;
போற்றுதிரு மாலழகர்க் கேற்றமாம் பண்ணைச்–சேரிப்
புள்ளிப்பள்ளர் ஆடிப்பாடித் துள்ளிக்கொள்வோமே.

—முக்கூடற்பள்ளு

### பண்ணைத் தலைவன்

விக்கலிற் குழறும் நாக்கும், கொக்கிறகு போற்பத்து
வெள்ளை மயிராய் நரைத்துத் துள்ளு மீசையும்
குக்கல்போல் குரைத்திருமல் கக்கியவா யும்சாய்த்த
கொண்டைக்கட்டும், உறுமாலை மண்டைக் கட்டுமாய்க்
கைக்குள்ளே புகைசுருட்டும் சக்கிமுக்கியும் பஞ்சும்
கல்லும், வெள்ளைப் பல்லும்குந்தந் தள்ளுங் கண்ணுமாய்
முக்கணனர் சிவசயிலற் பத்தெலாம் பயிரேத்த
மொண்ணைக்காலு மாக வந்தார் பண்ணைக்காரனர்.

## அறுவடை செய்தல்

திருநாள்கதிர் கொண்டார் ; அறுப்
பதுசீக்கிர மென்ருர் ;
சிலர்கூறுகள் தெரிந்தார் ; வயல்
சுழியாதுட னரிந்தார் ;
விரிவாய்ப்பரப் பரிகாய்ந்தபின்,
வெகுவாய்ப் புரிமுறுக்கி,
விளைசாலிகட் டிறுக்கிக்கள
மேற்போர்வை தரித்து,
பெரிதாய்ப்பல பிணையல்பிடித்
தடிப்பார் : மறுகளமும்
பேர்ப்பார் ; வைக்கோல் தவிரப்பொலி
குவிப்பார் ; சுளகெடுப்பார்.
பரிவாய்ப்பொலி தூற்றிப்பத
ரோடப் பதர்மாற்றிப்
பக்தியால்பிள்ளை யார்தமைவைத்
தப்பாற்பள்ள னெழுந்தான்.

—சிவசயிலப் பள்ளு

## (2) நாட்டுப்பாடல்

### குறத்தி சோழநாட்டு வளம் கூறுதல்

கேதாரகௌள ராகம்—ஆதி தாளம்

பல்லவி

சோழநாட்டின் வளமை யுனக்குநான்
சொல்லுவேன் கேளடி மானே!

அனுபல்லவி

வாழு முயர்மதிற் றஞ்சைச் சரபோஜி
மகராஜன் மனுநூல்சொல் முறையே யுளமகிழ்ந்து
(சோழ)

சரணங்கள்

1. நாடு தனிலூர்க ளெல்லா நகரங்கள்
நண்ணிடு மன்னகர் தம்மி லிலங்கிடும்
வீடுகள் யாவையுஞ் சந்தனத் தாருவின்
மேலிடு முத்தரந் தூண்க ளிசைத்திடும்
மாடமா ளிகைகளு நீணிலா முற்றமும்
வாதாய னங்களு மாகி விளங்கிடும்
நீடுமம் மாளிகை யெங்கு மணிதரு
நெல்லு மணிகளும் பொன்னு மலிந்திடும்.
(சோழ)

2. நகரங்க டோறு மருவி யிருக்கின்ற
நால்வகைச் சாதியி னோரும் பிறர்களும்
தகுமவர் தங்கட் கிசையுந் தொழிலொடு
சந்ததம் வாழ்வார்கள் மங்கள மாகவே
புகலுந்தே வாலய மெங்குநன் மண்டபம்
போற்றும் விமானங்கோ புரங்களெல்
(லாப் பொன்னின்
சிகர மிலங்குமெந் நாளுந் துலங்கிடும்
தேரு முயர்திரு விழாவு நடந்திடும். (சோழ)

# குறிப்புரை

## I. கடவுள் வாழ்த்து

1. சுந்தரமூர்த்தி சுவாமிகள் சைவசமய குரவருள் ஒருவர். சமய குரவர் மூவருடைய பாடல்கள் தேவாரம் என்று வழங்குகின்றன. மெய்ப்பொருள் - உண்மைப் பொருள்; வீட்டுலகம். போகம் - உலக சுகம். திரு - செல்வம்; வீடும் ஆகும். புணர்ப்பான் - சேர்ப்பான். பணிப்பான் - கட்டளையிடுவான். எளிவந்த - எளிமையாய்க் கிடைத்த. பழனம் - வயல். மறக்கலும் ஆமே - மறத்தலும் கூடுமோ?

2. தொண்டரடிப் பொடியாழ்வார் திருமாலடியவர்களாகிய ஆழ்வார் பன்னிருவருள் ஒருவர். கடவுளுடைய உருவ வருணனையைக் காண்க. சுவை - இன்பம். இவர் கடவுளின் புகழைப் பாடுவதையே விரும்புகின்றார்.

## II. நீதி

### (1) நீதிவெண்பா

இந்நூலின் ஆசிரியர் இன்னவர் என்பது தெரியவில்லை. இது வடமொழியிலுள்ள நீதி நூல்களிலிருந்து மொழிபெயர்க்கப் பட்டிருக்கவேண்டும் என்பது தோன்றுகிறது.

1. சவரம் - சாமரை. பூமருதேன் - பூவில் அமர்ந்துள்ள தேன். அழல் நெருப்பு. எள்ளார் - இகழமாட்டார்.

தாமரை பிறக்குமிடம் சேறு. பொன் - மண். முத்து - சிப்பி. சவரம் - மானின் மயிர். கோரோசனை - மாட்டின் வயிறு. பால் - பசுவின் மடி. தேன் - வண்டின் வாய். பட்டு - பட்டுப்புழு. புனுகு - ஒருவகைப் பூனை. சவ்வாது - ஒருவகைப் பூனை. அழல் - கட்டை.

2. ஒண் - பிரகாசமுள்ள. தளிர் - தளிர்போன்ற. மாதோ - மகடூஉ முன்னிலை. ஒருபோது - ஒருவேளை. போகி - சுகம் அனு

பவிப்பவன். திரிபோது - மூன்று வேளை. உடல் விட்டுப் போகி- இறப்பவன்.

3. நயம் - இனிய சொல். பூமாது - இலக்குமி. திரு - இலக்குமி.

4. விடம் தலையில் எய்தும். எய்தும் - பொருந்தியிருக்கும்- தேளுக்கு விடம் கொடுக்கில் வாழும். நோக்க அரிய - பார்ப்பதற்கு அருமையான. பைங்கண் - பசுமையான கண்களையுடைய.

5. கொம்பு உள்ள விலங்குகள் - மாடு, எருமை முதலியன. வெம்பு கரி - கோபிக்கின்ற யானை. வம்பு செறி - கொடுமையை மிகுதியும் செய்கின்ற.

6. மருப்பு - தந்தம். அருங்கவரி - பார்ப்பதற்கு அருமை யான கவரிமான். வரி - புலி. உகிரும் - நகமும். செறிந்த இடத்து- சென்று சேர்ந்த இடத்தில்.

7. பொற்பு ஊரும் - அழகு பொருந்திய. புல்லியர் - அற்பர். புகல் - சொல்வாய்.

8. சிலுசிலுப்பர் - படபடத்துப் பேசுவர். ஆன்று - அறிவு அகன்று. அமைந்த - அடங்கிய. முற்றுணர்வோர் - முற்றும் உணர்ந்தோர்.

9. இன்னல் - துன்பம்.

10. தென்புலத்தார் - பிதிரர். விருந்து-விருந்தினர். ஒக்கல் - உறவினர். தக்கவரை இன்றி - தகுதியுள்ளவர்களாகிய இவர்க ளில்லாமல். கவர்மீன் - பற்றிக்கொண்ட மீனை. குறி - எண்ணு வாய்.

## (2) நீதிநெறி விளக்கம்

1. கலன் - நகை, ஆபரணம். அணிகலன் - நகை. முற்ற - முழுவதும். முழுமணி - பெரிய மணிகளால் ஆகிய. பூணுக்கு - ஆபரணத்திற்கு. கல்வியில் சிறந்த ஓர் அணிகலன் இல்லையாத லால் அதனை விரைந்து பெறுதல் வேண்டும்.

2. மெலியாரை - பொருள் குறைந்த ஏழைகளை. உடைமை- செல்வம். அகம் - உள்ளம். கற்றூரை - மிகுதியாகப் படித்தறிந்த

வர்களை, கருத்து - உள்ளம். அழிக - உடையவராகுக. எற்றே - எத்தன்மையவாம்.

'பெற்றது போதும் என்று அமைந்து மகிழ்க; கற்றது போதும் என்று அமையாமல் மேல்மேலும் கற்க' என்பதே இதன் கருத்து.

3. பெருஞ்சுட்டு - நன்கு மதிக்கப்படுதல். யாண்டும் - எவ்விடத்தும். நோற்பது - கடமையாகச் செய்யவேண்டுவது. பிறர்பிறர் - மற்றையோருடைய. சீர் - பெருமைகள். தூற்றி - விரிவாக எடுத்துக் கூறி. சிறுமை - குறைபாடுகள். புறங்காத்து - எடுத்துக் கூறுமல் விட்டு. தாழ்ச்சி - பணிவு.

பிறர்பழி தூற்றுமையும், பிறர் புகழ் சொல்லுதலும், பணிவாக நடத்தலும் நன்மதிப்பு உண்டாக்குபவைகளாம்.

4. வாங்கும் - உட்கொள்ளுகின்ற. கவளம் - உணவு உருண்டை. தூங்கும் - அசையும் இயல்பை உடைய. களிறு - யானைகளோ. ஊரும் - ஊர்ந்து செல்லும். உய்யுமால் - பிழைத்திருக்கும். ஆரும் - நிறைந்த. கிளையோடு - சுற்றத்தோடு. அயின்று - தாமும் உண்டு.

5. மெய் - உடல். கண் துஞ்சார் - தூங்கமாட்டார். செவ்வி - காலம். கருமம் - வேலை.

உழைப்பையும் உணவையும் உறக்கத்தையும் துன்பங்களையும் பொருட்படுத்தாமல் எடுத்த வேலையை முடிக்க முயலல் வேண்டும்.

## (3) திருக்குறள்

1. அகரம் முதல - அகரமாகிய முதலை உடையன. உலகு ஆதி பகவன் முதற்று என மாற்றுக. முதற்று-முதலை உடையது.

2. வான் - மழை. நின்று - இடைவிடாமல் நிற்க. வழங்கி - நிலைபெற்று. உணரல் பாற்று - உணரும் தன்மையையுடையது.

3. அரிய - அரியவற்றை. செய்கலாதார் - செய்யமாட்டாதவர்.

4. மாசு - குற்றம். அனைத்து - அவ்வளவே. ஆகுலம் நீர - ஆரவாரத் தன்மைய.

5. வாழ்வாங்கு - வாழும் தன்மையால்.

6. தொழாஅள் - தொழாமல். கொழுநன் - கணவனை. எழுவாள் - துயிலெழுவாள். மழைபெய்யும் என மாற்றுக.

7. என்ப - என்று சொல்லுவர். மழலைச்சொல் - இளஞ்சொல்.

8. அன்பிலாதார் பிறர்க்குப் பயன்படாமையால் எல்லாப் பொருளாலும் தமக்கே உரியவர். அன்புடையவர் அப்பொருள்களாலே யல்லாமல் தம் உடம்பாலும் பிறர்க்கு உரியவர். என்பு - எலும்பு. ததீசி முதலியோரின் வரலாறுகளைக் காண்க.

9. இல் இருந்து என மாற்றுக. ஓம்பி - பொருளைக் காப்பாற்றி. வேளாண்மை - உபகாரம்.

10. இனிய - இனிய சொற்கள். உளஆக - தனக்கு இருக்க. கவர்ந்தற்று – உண்டதை ஒக்கும்.

11. நன்றி - ஒருவன் முன் செய்த நன்மை. நன்றன்று - அறமன்று.

12. தக்கார் - நடுவு நிலைமையையுடையவர். எச்சம் - நன்மக்கள்.

13. உள்ஆறும் - மனத்திலே ஆறும்.

14. ஒட்ட - பொருந்த.

15. அகழ்வாரை - தன்னைத் தோண்டுபவரை. தலை - தலையாய அறம்.

16. அறன் ஆக்கம் - அறமும் செல்வமும். பேணது - மகிழாமல். அழுக்கறுப்பான் - பொறாமை கொள்வான்.

17. அறம் சொல்லும் நெஞ்சத்தான் அன்மை - அறத்தை நல்லதென்று வாயால் சொல்லுவானாலும் அவன் மனத்தால் அவ்வறத்தை உணர்ந்தவன் அல்லன் என்பது. புன்மையால் - அற்பத்தனத்தால்.

18. சொல்லிற் பயனுடைய சொல்லுக என்று மாற்றுக.

19. சூழற்க - எண்ணவேண்டா. சூழ்ந்தவன் கேடு அறம் சூழும் என்று மாற்றுக.

20 ஒப்புரவு - உலகநடை. ஒத்தது அறிவான் - உலக நடையை அறிந்து செய்வான். மற்றையான் - அவ்வாறு அறிந்து செய்யாதவன்.

21. கொளல் - ஏற்றுக் கொள்ளுதல். நல்ஆறு - நல்ல நெறி.

22. தோன்றின் - மக்களாய்ப் பிறக்கின். அஃது இலார் - அக்குணம் இல்லாதவர்.

23. அஉலகம் - வீட்டுலகத்து இன்பம். ஆங்கு - போல.

24. ஆக்கம் - செல்வம். ஆவதுபோல - வளர்வதுபோலத் தோன்றி. அளவு இறந்து - தன் எல்லையைக் கடந்து.

25. தீமை பிறவுயிர்க்குத் தீது.

26. காக்கின் - துன்பம் அடையாமற் காக்க நினைத்தானுனல்.

## III. பஞ்சதந்திரக் கதைகள்

பஞ்சதந்திரம்—ஐந்து தந்திரங்கள். இந்நூலில் உள்ள கதைகள் கதைக்குள் கதையாக அமைந்துள்ளன. அவை அரச குமாரருக்கு அறிவுறுத்தக் கூறிய கதைகள். இந்நூல் வடமொழியிலிருந்து மொழி பெயர்க்கப்பட்டது. இதைத் தமிழில் செய்யுளாகப் பாடியவர் வீரமார்த்தாண்ட தேவர்.

ஐந்து தந்திரங்கள் அல்லது உபாயங்கள் என்பன பஞ்ச தந்திரம் எனப்படும். அவை: 1. நட்புப் பிரித்தல், 2. நட்புப் பெறுதல். 3. அடுத்துக் கெடுத்தல், 4. பொருளழிவு, 5. ஆராயாது செய்தல் என்பன.

### 1. வேடன் கதை

1. வனம் - காடு, இனம் ஒன்று - சாதிக்குப் பொருந்திய, கனம் - மேகம், மருண்டு - திகைத்து.

2. பேடு - பெண் பறவை, மங்கியதோ - இறந்ததோ, வன சரன் - காட்டில் திரிபவனை வேடன், அம்கை - அழகிய கை, உறு - பொருந்திய.

3. முன்வினை - முன் பிறவியில் செய்த பாவம், இன்னவன் - இவன், எரி கொளுவி - தீயை மூட்டி, அருந்து - சாப்பிடு.

4. தெய்வஉரு-தேவர் வடிவம், வான் உலகு - தேவலோகம், அடைந்த - அடைந்தன.

5. எரி - தீ. கதி - மோட்சம், தரை - பூமி, உளம் தளர்ந்து- மனம் சோர்ந்து, சரண் ஆர்த்தி - அடைக்கலம் (காப்பாற்று),

சார்ந்தார் - அடைந்தவர். புரக்க - காப்பாற்ற, அருள் - கருணை, பொன்ற - இறக்க (அழிய), எச்சம் - மலம், ஓதும் - சொல்லும்.

### 2. காகம் பாம்பைக் கொன்றது

1. கோடு - கிளை, பேடு - பெட்டை, நாடி - தேடி.

2. பாங்கன் - நண்பன், மஞ்சனச்சாலை - நீராடுமிடம். பொன்னணி - பொன்னுபரணம்.

3. காவலன் - அரசன். ஈர்ந்தனர் - அறுத்தனர். உபாயம் - தந்திரம்.

### 3. வழித்துணை

1. தேசிகன் - குரு, கருமம் - காரியம்.

2. அலவன் - நண்டு, பெய்து - இட்டு, அரவு - பாம்பு, கர்க்கடகம் - நண்டு.

3. மாரணம் - கொலை, மறையவன் - பிராமணன்.

## IV. பலசுவை

### 1. தொழிற்பாடல்

1. குக்கல் - நாய். சக்கிமுக்கி - நெருப்புண்டாக்க உதவும் கற்கள்.

2. கூறு - பகுதி. அரி - அறுத்த கதிர். புரி - வைக்கோற் புரி. சாலி - நெல். களம் - நெற்களம். பிணையல் - சேர்க்கை. பேர்ப்பார் - மாற்றுவார். சுளகு - முறம். பொலி - நெல்.

### 2. நாட்டுப்பாடல்

சந்தனத்தாரு - சந்தனமரம். வாதாயனம் - பலகணி. தேர் - தேர்விழா.

# PODIGAI VACHAKAM

FOR

FCRM I–PART I

BY

VIDWAN N. ARUMUGAM

&

VIDWAN S. RAMALINGAM

REVISED AND EDITED BY

PANDITHA VIDWAN L. P. Kr. RAMANATHAN CHETTIAR

*Professor of Tamil,*

*Annamalai University, Annamalai Nagar.*

VELLAYAN PUBLISHING HOUSE

KANDANUR, RAMANATHAPURAM DIST.



[*Price As.* 14